# எங்கள் திருமண முறைகள்

"இம்மை மாறி மறுமை ஆயினும்
நீ ஆகியர் என் கணவனை
யான்ஆ கியர் நின் நெஞ்சு நேர்பவளே"
(குறுந்தொகை 49:3-5)



கோவை மாவட்டம்

(கைக்கோளர்) செங்குந்த முதலியார் இல்லத்

# திருமண சீர் சிறப்புகள்

மா. சுப்பிரமணியன்
மு.ரா. இராமலக்குமி

# எங்கள் திருமண முறைகள்

## கோவை மாவட்டம்
## செங்குந்த முதலியார் இல்லத்
## திருமண சீர் சிறப்புகள்

தொகுத்தவர்கள்

**மா.சுப்பிரமணியன்**
பொதுப்பணித்துறை தொழில் நுட்பப் பிரிவில்
தனிநிலை வரைதொழில் அலுவலர் (பணி ஓய்வு)

**மு.ரா. இராமலக்குமி**
அரசுமேல்நிலைப்பள்ளியில் உடற்பயிற்சி
ஆசிரியை (பணி ஓய்வு)

அன்பளிப்பு பிரதி

# அணிந்துரை

## அப்பரடிப்பொடி புலவர். வீ. சொக்கலிங்கம் M.A.B.Ed,

கோவை மாவட்டம் காரமடை முருகபக்தர்கள் சங்கத்தின் தலைவர் திருமுருக. P. காளிமுத்து அவர்கள் சில மாதங்களுக்கு முன்னர் அவர்தம் உறவினரும் தமிழக அரசின் பொதுப்பணித்துறை தொழில் நுட்ப பிரிவில் தனி நிலை வரை தொழில் அலுவலருமான (பணி ஓய்வு) உயர்திரு. மா. சுப்பிரமணியன் அவர்கள் தம் குடும்பத்தினரும் விசயமங்கலம் வந்திருந்தார்கள். எங்களது கலந்துரையாடலின் போது கொங்கு நாட்டு மக்களின் பண்புச் சிறப்புகள் பற்றியும் அவர்களது வாழ்வியல் சடங்குகளை பற்றியும் விரிவாக பேசிக் கொண்டு இருந்தோம். அன்று ஒருநாள் பகல் முழுவதும் எங்களது பேச்சுக்கள் இம்மண்ணைப் பற்றியும் இம்மண்ணின் மைந்தர்களைப் பற்றியுமே விரிந்து கிடந்தன எனலாம். தற்காலத்தில் கொங்கு நாட்டு மக்களின் சடங்கு வகைகள் வரவர குறைந்து கொண்டு வருவதைப் பற்றிய கவலையின் ரேகைகளும் எங்களின் எண்ணங்களில் படர்ந்தன. கால மாற்றங்களில் இச்சடங்குகளின் சுவடுகள் கூட காணாமல் போனாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை என்ற கருத்து வலுத்தமையால் நிகழ்கால எதிர்காலத் தலைமுறைகளின் நினைவுகளுக்கு இச்சடங்குகளை வைப்பு நிதியமாக எழுத்துருவில் பதிவு செய்து பத்திரப்படுவது என்ற பாதுகாப்பு உணர்வில் தொடுக்கப்பட்டதே "எங்கள் திருமண முறைகள்" என்ற இந்த நூல்.

நம் முன்னோர்கள் தங்கள் வாழ்க்கையில் தொன்று தொட்டுக் கடைப்பிடித்து வந்த பழக்க வழக்கங்களைத்தான் நாம் பொதுவாகச் சடங்குகள் என்று கூறுகிறோம். சடங்குகள் இல்லாத எந்த விழாக்களும் இல்லை என்றே கூறலாம். உலக அளவில் உள்ள எல்லா மதங்களிலும் எல்லா இன மக்களிடமும் இந்த சடங்குகள் என்பன முக்கிய இடம் பெற்றுத்தான் வந்திருக்கின்றன. இதில் இந்து மதத்திலும் இந்தியர்களிடமும் தான் சடங்குகள் அதிகம் காணப்படுவதாக முழங்குபவர்களும் இல்லாமல் இல்லை. இந்து மதத்தில் சடங்குகள் அதிகம் தான், இல்லை என்று சொல்ல முடியாதது தான். இருந்தாலும் சடங்குகளே இந்துமதம் என்று சொல்லி விட முடியாது. பொதுவாகச் சடங்குகள் என்பன மனதை முறைப்படுத்த உதவும் சாதனங்கள் என்றுதான் கொள்ள வேண்டும். ஆனால் இந்தச் சடங்குகள் அனைத்தும் அர்த்தமுள்ளவை என்பதை வாசகர்கள் மறந்து விடக்கூடாது. கவியரசு கண்ணதாசன் அவர்கள் தனது வாழ்வின் பிற்பகுதியில் இந்து சமய தத்துவங்களில் தன்னை கரைத்துக் கொண்டு இமயமாக உயர்ந்து நின்றபோது எழுதிக் குவித்த சிகரங்கள் தான் "அர்த்தமுள்ள இந்து மதம்" என்ற தொகுதிகள் ! அதனைப் படித்து வியக்காதவர்கள் இந்து சமய உலகில் மிகக் குறைவாகத்தான் இருக்க முடியும்.

இந்து மதத்தில் கருத்துவழிச் சிந்தனைகளைப் பரவலாக்கும் முயற்சியில் நம் முன்னோர்கள் முனைப்புக் காட்டாமல் போனதும் கூட நம்முடைய தவக்குறைத்தான். ஆலயத்திற்கு தேங்காய், பழம், மலர்கள் வெற்றிலை பாக்கு என்பனவற்றைக் கொண்டு செல்ல வேண்டும் என்ற சடங்கு தெரியும், ஆனால் அதில் புதைந்து கிடக்கும் விண்ணப்பங்களின் உள்ளுறைப் படிவங்கள் நமக்கு ஏனோ தெரியவில்லை! தேங்காய் சீராக உடைபட வேண்டும் என்பதும் அதில் உள்ள பருப்பு கெடாது தூய வெண்மையாக இருக்க வேண்டும் என்றும் பக்தர்கள் விரும்புகிறார்கள். இந்தத் தேங்காய் இறைவனது சன்னதியில் சீராக உடைபட்டது போன்று தங்கள் வாழ்க்கையும் சீராக நடைபெற வேண்டும். அத்துடன் தங்கள் வாழ்க்கை கெடாத வண்ணம் தூயதாக இந்தத் தேங்காயின் பருப்பு

போன்று இருக்க விண்ணப்பிக்கும் அடையாளம் தான் ஆலயத்திற்கு தேங்காய் கொண்டு செல்லும் தத்துவமாகும்,வாழைப்பழம் போன்ற கனிவர்க்கம் கொண்டு செல்வதின் நோக்கும் தங்கள் வாழ்க்கையை இனிமைப்படுத்த வேண்டும் என்று கேட்கும் நோக்கில் கனி வர்க்கங்களைக் கொண்டு செல்கிறோம். இந்த மலர்களைப் போன்று தங்கள் வாழ்க்கையை விருத்திப் படுத்த வேண்டும் (தாவரங்கள் பூத்துக் காய்ப்பதைச் சுட்டுவது) என்று இறைவனிடம் கேட்பதன் குறியாகத்தான் மலர்களைக் கொண்டு செல்கிறோம். தங்கள் வாழ்க்கை சீராகவும் தூய்மையாகவும் இருந்தால் மட்டிலும் போதாது – தங்கள் வாழ்க்கை அந்த கனிவர்க்கங்களைப் போன்று இனிமையாக இருந்தால் மட்டிலும் போதாது – தங்கள் வாழ்க்கை அந்த மலர்களைப் போன்று விருத்தியுடையதாக இருந்தால் மட்டும் போதாது – தங்கள் வாழ்க்கையை வளப்படுத்த வேண்டும். (இலட்சுமிகரம்) என்பதன் குறியீடாகத்தான் வெற்றிலையைக் கொண்டு செல்கிறோம். இக் குறியீட்டுப் பொருட்களை ஒரு தாம்பாளத்தில் வைத்து ஆலயத்திற்குக் கொண்டு செல்லும் போது இரண்டு கைகளிலும் ஏந்தி பயபக்தியுடன் மெல்ல நடந்து செல்லும் போது மனம் சாந்தம் அடைகிறது. கவனம் கடவுளின் மீதும் தட்டின் மீதும் இருப்பதால் நடை நிதானப்படுகிறது. ஆலயத்தில் இத்தட்டுகளை ஏந்தியபடி அன்பர்கள் மிக நிதானமாக நடந்து வருதல் வேண்டும் என்பது விதி. இது மனதை ஒரு முகப்படுத்துவதற்கும் இறை உணர்வுடன் ஒன்றி இருப்பதற்கும் உடலும் மனமும் இறுக்கமின்றி சாந்த நிலையை அடைவதற்கும் துணை செய்யும் சாதனங்களாகவும் அமைவதை அன்பர்கள் கண்டும் உணர்ந்தும் அகங்குளிரலாம்.

இது போன்றே திருமண நிகழ்வுகளில் மணமக்களை வாழ்த்தி மகிழ்வதற்காக அரங்கில் கூடி இருக்கும் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் அட்சதைகளைத் தருவதைப் பார்க்கலாம். இச்சடங்கின் ஆழமான பொருள்நலம் தெரியாமல் அன்பர்கள் மணமக்களை நோக்கி அட்சதைகளை வீசி எறிந்துவிட்டு அவசரகோலமாக உணவரங்கிற்குச் சென்று விடுகிறார்கள். ஒவ்வொருவராக மணமக்களின் அருகில் சென்று ஆசிர்வதித்து விட்டு வர வேண்டும் என்பதற்காகத்தான் அவ் அட்சதைகள் அனைவருக்கும் வழங்கப்பட்டன. அட்சதைக்குப் பயன்படுத்தப்படும் பச்சரிசியானது முனை முறியாததாக இருக்க வேண்டும். அதாவது முளைப்புத்திறன் கொண்ட முளையுடன் உயிர்ப்புத் தன்மை கொண்டதாக இருக்க வேண்டும். இதற்கு கைக்குத்தாலால் உண்டாக்கப்பட்ட அசிரியைத்தான் பயன்படுத்தவேண்டும். அதில் மஞ்சள் பொடியும் மலர்ந்த மலர்களையும் கலந்து கொள்ள வேண்டும். ஆக அட்சதை என்பது பச்சரிசி, மஞ்சள்,மலர்கள் என்ற இம்மூன்றின் கலவையாக இருக்க வேண்டும். மணமக்களை இம் மூன்றும் கொண்டு வாழ்த்தும் போது இதில் அடங்கிய பொருள் நலம் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. முளைப்புத் திறன் கொண்ட முளையுடன் கூடிய பச்சரிசிதான் உயிர்ப்புடையது என்பதால் அதன் முளை வற்புறுத்தப்படுகிறது. மணமக்களின் இல்லற வாழ்க்கை வளத்தோடு (உணவு பஞ்சம் இல்லாமல்) அமைய வேண்டும் என்பதற்காக பச்சரிசியும், அவ்வாழ்க்கை நலத்தோடு (நோய் நொடியின்றி) அமைய வேண்டும் என்பதற்காக மஞ்சள் பொடியையும், அவ்வாழ்க்கை சந்ததி விருத்தியுடன் கூடியதாக (வாழையடி வாழை) அமைய வேண்டும் என்பதற்காக மலர்களையும் கலந்து வைத்தார்கள். இச்சடங்கு இன்றும் நடைமுறையில் உள்ளது. ஆனால் இதில் அடங்கியுள்ள உள்ளுறை பொருள் இதுவென மக்கள் அறியாது இருந்து வருகிறார்கள். சடங்கு வழிச் சிந்தனைகள் பெருகிய அளவிற்கு கருத்து வழிச் சிந்தனைகள் பெருகாமல் போனது தான் நம் அறியாமைக்குக் காரணம். ''இனியொரு விதி செய்வோம் அதனை எந்த நாளும் காப்போம் என்று மகாகவி சுப்பிரமணிய பாரதியார் கூறுவார். அது போன்று நாம் நமது மூதாதையர்கள் நமக்கு விட்டுச் சென்ற சடங்குகளை நடைமுறைப்படுத்துவதுடன் அதன் உள்ளுறை அறிவுப் பொருள்கள் இவை இவையென உணர்ந்து இருத்தல் வேண்டும் என்பது இன்றைய அறிவுலகின் எதிர்பார்ப்பு ஆகும்.

நம் இந்து மதச் சடங்குகள் அனைத்திலும் மிக முக்கிய இடம்பெறும் மங்கலப் பொருட்களில் முதன்மையான இடத்தைப் பெறுவது வெற்றிலைதான், தாவரவகைகளில் இது ஒரு கொடிவகைத்தாவரம். இவ்வெற்றிலைக் கொடி தன் வாழ்க்கையில் பூப்பதும் இல்லை. காய்ப்பதும் இல்லை! கன்னித்தன்மை கழியாத ஒரு பெண்பிள்ளையைப் போன்று பிரமச்சரியம் கெடாத ஒரு தவவாழ்வைக் கொண்டிருப்பது இவ்வெற்றிலைக் கொடிதான். இவ்வெற்றிலையில் நாம் வணங்கும் தெய்வங்களான கலைமகளும் திருமகளும் வாசம் செய்கிறார்கள் என்பது ஆழ்ந்த நம்பிக்கையாகும். நம் பெரியவர்கள் எந்த ஒரு நல்ல காரியத்தைத் தொடங்குவதாக இருந்தாலும் கன்னித் தன்மை நீங்காத பெண்பிள்ளைகளைக் கொண்டு தொடங்குவார்கள். அது போன்று கன்னித்தன்மை நீங்காத இவ்வெற்றிலையை நம் பெரியவர்கள் ஒரு கன்னிப்பெண்ணாகக் கருதி சடங்குகளில் முன்வைத்து தொடங்குகிறார்கள் என்பது சடங்குகள் தரும் கருத்துவழிச் சிந்தனையாகும். சடங்குகள் ஒவ்வொன்றிலும் காணப்படும் இக்கருத்துவழிச் சிந்தனைகளை மக்கள் மத்தியில் பாவலாக்கும் முயற்சிகள் பல்கிப்பெருகுதல் வேண்டும்.

திருநெல்வேலி மாவட்டம், தென்காசி வட்டம், கடையநல்லூரில் ஒரு திருமண விழாவிற்கு தலைமை ஏற்கச் சென்றபோது மணமகனாக இருந்தவர் என்னை ஒரு கேள்வி கேட்டார். இதுவும் ஒரு சடங்குவழி கேள்வி தான். அங்கு நான் அர்த்தப்படுத்தி சொல்லிய விளக்கத்தினை இங்கு வாசகர்களுக்கு விரித்து வைக்க விரும்புகிறேன். இது ஒன்றும் மூடு மந்திரம் இல்லை. மூடு மந்திரங்களால் ஏற்பட்ட பலன்களின் விளைவுகள் பெரும்பாலும் இழப்புகளாகத்தான் இருக்க முடியும். திருமணத்தின் போது மணமகன் மணமகள் கழுத்தில் நூல்கயிற்றால் ஆன திருமாங்கல்ய சரடில் மூன்று முடிச்சுகள் போடுவது என்பது ஒரு சத்திய பிரமாணம் அல்லது ஒரு சங்கல்பம் எனக் கொள்ளலாம். இம் மணமக்கள் தங்கள் இல்லற வாழ்வில் கருத்து ஒருமித்து இருவரும் மாறி இதயம் புகுந்து ஒருவர் நலனில் மற்றவரின் நலன் அமையும் படியான ஏகத்துவ உணர்வு கொண்டதாக இருக்க வேண்டும். அன்பின் பிணைப்பால் இரண்டு உடலுக்கு உயிர் ஒன்று என்பது போல் நாமிருவரும் ஒன்று கூட்டல் ஒன்று சமம் இரண்டு என்று இல்லாமல், ஒன்று கூட்டல் ஒன்று சமம் ஒன்று என்று எண்ணும் படி நம் வழிபடு தெய்வம் உமையொருபாகர் (அர்த்தநாரீசுவரர்) போன்று ஒருவராக வாழும் இவ்வாழ்க்கை இந்த பிறவியில் மட்டுமல்ல அடுத்த பிறவியிலும் நீ தான் எனக்கு மனைவியாக அமைய வேண்டும் நான் தான் உனக்கு கணவனாக அமைய வேண்டும் என்பதைக் கூறும் சங்கல்ப எண்ணமாக அம்மூன்று முடிச்சுகளையும் கூறலாம்'' எனக் கூறினேன்.

நமது பழந்தமிழர்கள் நமக்குத்தந்த சங்கநூல் குறுந்தொகையில்

*''இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீ ஆகியர் என் கணவனை*
*யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே''*

என்ற பாடல் இந்நூலில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

மனம் ஒன்றுபட்ட தம்பதியினர் இன்றும் தங்கள் காலம் முழுமையும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளும் விடுதலறியா பெரும் விருப்போடுகூடி, மனம் வாக்கு காயம் என்ற மூன்றும் ஒன்றுபட்டு பேசப்பட்டு வரும் அந்தரங்க மொழிகளாகும்! இங்குத்தான் நம் பாரத மண்ணின் பெருமையே அடங்கிக் கிடக்கின்றன.

இதன் தெளிபொருள் ''இப்பிறப்பு சென்று மறுபிறப்பு வந்தாலும் எனக்கு வாய்க்கும் கணவன் நீயே ஆவாய், பிறவி தோறும் நின் மனமொத்த மனைவியாக நானே அமைவேன்'' என்று தலைவி கூற்றாக இச் செய்யுள் அமைந்திருப்பதை காணலாம். ஒருவனுக்கு ஒருத்தி என்பது இப்பாரத

தேசத்தின் கலாச்சாரமும் ஆகும். இந்த இணைப்பும் பிணைப்பும் கொண்ட உறவு, பிறவிகள் தோறும் தொடரவேண்டும் என்பதே தம்பதியரின் எண்ணமாக இருக்கும். நம் இந்துமத தெய்வங்களின் அவதாரங்களிலும் அதன் அதன் சக்திகள் தொடர்வதையும் புராணங்களில் காணலாம். நம் பரணி இலக்கியங்களிலும் வீரமரணம் அடைந்த தலைவனது உடலை மண்மகள் தழுவுவதற்கு முன்பாகத் தான் தழுவியும் பிரிந்துவிட்ட அவனது ஆவியை விண்மகள் தழுவுவதற்கு முன்பாக முன் சென்று தான் தழுவிக் கொள்ளும் பொருட்டு அவனுக்கு முன்பாக உயிரை விட்ட குலப்பெண்கள் நம் குலப் பெண்கள்! கணவனின் உயிரோடு தன் உயிரையும் போக்கி வீரமாசதி என புகழ் தாங்கி வரலாறு சொல்லும் மாசதிக் கற்களும். வீரமாத்தி தெய்வ வழிபாடும் இங்கு நாம் கேட்கும் வரலாறுகளாகும். உடலின் சீரான இயக்கத்திற்குக் காரணமாக இருக்கும் உறுப்புகளில் மிக முக்கியமாகக் கருதப்படுபவை இதயமும் மூளையும் என்ற இரு உறுப்புகளாகும். இதில் இதயமாக மனைவியும் மூளையாகக் கணவனும் இருக்க வேண்டும் என்பது சான்றோர்களின் எதிர்பார்ப்பு. இதயத்தின் இயக்கம் இல்லாமல் மூளையின் இயக்கம் உயிர்ப்புத் தன்மையைப் பெறுவது இல்லை. அதுபோன்று கணவனுக்கு மனைவி உயிரோட்டமாக இருக்கவேண்டும். இதயத்தில் அன்பும் மூளையில் அறிவும் தொழில்படுதல் வேண்டும். அதுபோன்று அன்பின் வடிவாக கனிவுடைய மனைவியும் அறிவின் வடிவாக தெளிவுடைய கணவனும் அமைய வேண்டும். இதயம் மூளை என்ற இரண்டின் ஆரோக்கியம் உடலின் ஆரோக்கியமாக இருப்பது போன்று மனைவி கணவன் இவ் இரண்டு பேர்களின் ஆரோக்கியம் குடும்பத்தின் ஆரோக்கியமாக இருந்து நலம் சேர்க்கும்.

இன்று உலக அரங்கில் எல்லா இன மக்களும் தங்கள் தங்கள் பண்பாட்டு ஒழுக்கங்களையும் மரபு வழிச் சடங்குகளையும் பொன்னைப் போல் போற்றிப் பாதுகாத்து ஒழுகியும் வருகின்ற காட்சிகளைக் கண்கூடாக நாம் கண்டு வருகிறோம். அந்த வகையில் நம் பண்பாட்டுச் சிறப்புகளை நினைவுப்படுத்தி மரபுவழிச் சடங்குகளை ஆங்காங்கே சங்க இலக்கியச் சான்றுகளுடன் விளக்கம் செய்து நம் அன்பு சகோதரர் கோவை உயர்திரு மா.சுப்பிரமணியன் இராமலட்சுமி அவர்கள் **"எங்கள் திருமண முறைகள்"** என்ற நூலினைத் தம் சமுதாய மாந்தர்களுக்கு தலைமுறைகள் தலைமுறை தலைமுறையாக பின்பற்றி ஒழுகத்தக்க மிகச்சிறந்த பயனுள்ள அரியதொரு படைப்பாகத் தந்துள்ளார். நுழைவாயில் சங்க இலக்கியங்களில் மூழ்கி மூழ்கி முத்தெடுத்து அங்கங்கே அணி செய்துள்ளார். செங்குந்தர் மரபு வழியில் வந்த வரலாற்றினையும் இணைப்பாக சேர்க்கப்பட்டுள்ளது சிறப்பாகும். இன்னும் விரிவாக அடுத்து அடுத்து வரும் பதிப்புகளில் எழுதும் எண்ணத்தில் இருக்கும் அவருக்கு சமுதாயச் சான்றோர்கள் தாங்கள் அறிந்த செய்திகளைத் தந்து உதவலாம். அது தங்கள் சமுதாயத்திற்கு அவரவர் செய்யும் உபகாரமாகவும் இருக்கும். இந்நூல் மேலும் விரிந்து செல்ல உதவும்.

இந்நூலின் முதல்பதிப்பினை மணிவிழா காணும் அவரது இளவல் திரு. மா. முருகேசன் முத்துலட்சுமி அவர்கள் தங்களின் மணிவிழா மலராக வெளியிடும் செய்தி கண்டு மகிழ்கிறேன். மகிழ்வதுடன் இந்நூலைப் பல பதிப்புகளாகக் காண விழையும் இந்நூலாசிரியரையும், மணிவிழா காணும் தம்பதியரையும் உமையொருபாகரின் திருவருளை மனங்கொண்டு வாழ்த்தி செங்குந்த மரபுச் செம்மல்களையும் வாழ்த்தி மகிழ்கிறேன்.

*மணமக்கள் நெல் போல் பொலிக !* *பொன் போல் சிறக்க !*

விஜயமங்கலம்
15-10-2003

# சில அடிப்படைச் செய்திகள்

எண்ணம்

கொங்கு மண்டலம், அப்பரடிகள் சிவ நெறி வழிபாட்டுத் திருக்கூட்டம், அமைப்பாளர் நல்லாசிரியர், அப்பரடி புலவர் வீ. சொக்கலிங்கனார், எம்.ஏ., பி.எட்., விசயமங்கலம் அவர்களைக் காணும் வாய்ப்பு எதிர்பாராதவிதமாக ஏற்பட்டது. அதுவும் திருமுருக பக்தர்கள் காரமடை குழுத் தலைவர், முருக. காளிமுத்து அவர்கள் மகள் செல்வி. பரிமளம் என் உடன்பிறந்த தம்பி முருக.எம்.முருகேசன் அவர்கள் மகன் செல்வன். நமச்சிவாயன் திருமண அழைப்பாகவும் அமைந்தது. நல்லாசிரியருடன் கலந்துரையாடும் பொழுது அவர்கள் எலிபோல கவராமலும், மூட்டைப்பூச்சி போல உறுஞ்சாமலும், கறையான் போல அறித்தெடுக்காமலும் தேனீக்கள் போல உழைத்து வாழ்க்கையில் முன்னேற்றம் அடைவது சிறந்தது என வாழும் முறையை சுருக்கமாகவும், எளிய முறையிலும் விளக்கமளித்தார். அவர்களது பொருள் செறிந்த ஆன்மீக உணர்வும் சமுதாயத்துக்கு ஒவ்வொருவரும் தங்களால் இயலும் சிறுபணியையாவது செய்யக் கடமைப்பட்டவர்கள் என்பதும் உணர முடிந்தது.

இந்த வாய்ப்பினை நழுவவிடாமல் எங்கள் மனதில் சில நாட்களாக இருந்த எண்ணத்தை வெளிப்படுத்தினோம். அதாவது, ஒரே இனத்தவர் திருமண நிகழ்வுகளில் நடைபெறும் சடங்குகளில் ஒவ்வொரு பகுதிக்கும் வேறுபாடுகள் காணப்படுகிறது. ஒரு பகுதியில் வாழும் ஓர் இனத்தவர் திருமணச் சடங்குகளாவது ஒத்த மாதிரியிருந்தால் நன்றாக இருக்குமெனவும் அது தொகுத்து வழங்கப்பட்டால் எல்லோரும் தெரிந்து கொள்வார்கள் எனக் கூறினோம். அவர் சற்று நிதானித்து உங்கள் ஆதங்கம் எனக்கும் புரிகிறது. அப்பணியை நீங்களே மேற்கொள்ளுங்கள் எனச் சொன்னதுடன் சங்க காலத் தமிழர் பண்பாடு, மரபுகளை காலத்திற்கேற்ற நடைமுறைகளுக்கு ஒப்ப நாம் மாறுபாடுகளுடன் 'சடங்குகள்' செய்து வருகிறோம் ஆகையால், சங்கப் பனுவல்கள் தொகுப்பில் இடம் பெறுவது இன்றியமையாதது எனக் கூறியதோடு எங்களுக்கு நல்வாழ்த்துக்களும் ஆசியும் வழங்கினார்.

செயல்

சங்க கால தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிய மக்கள் வாழ்க்கை அவர்களது பழக்க வழக்கங்கள் இன்னின்ன சங்க நூல்கள் மூலம் அறிந்து கொள்ள வழிகாட்டுதலுக்காக எங்கள் உறவினரும் அரசு மேனிலைப் பள்ளி தலைமை ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவரும் குளத்துப்பாளையம் புலவர் கு.க. கிருட்டினசாமி எம்.ஏ., எம்.எட்., அவர்களை அணுகி எண்ணத்தை வெளியிட்டோம்.

தமிழ் மொழியை அறிந்து கொள்ள வந்த ஆரிய அரசன் பிரகத்தனுக்கு தமிழையும் தமிழர் 'களவு நெறியில்' தலைவன் தலைவி 'நேர் இறை முன் கை பற்றி' நாடறி நன் மணம் புரிந்த பிற்பாடு தான் கணவன் மனைவி ஆவார். எனவே அவர்

நாட்டு 'கந்தர்வ மணத்தினும்' (விவரம் அட்டவணையில் காண்க) சிறப்புடைய தமிழர் திருமண முறையென விளக்கம் அளிக்கும் வகையில் 'கபிலரால் பாடப்பட்டுள்ள 'குறிஞ்சிப் பாட்டு' போல் அகத்திணையை விளக்கும் பனுவல்கள் கொண்ட சங்க நூல்கள் பல உள்ளனவெனவும், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு பரிபாடல், கலித்தொகை, அகநானூறு என எட்டுத் தொகை நூல்களை குறிப்பிட்டதுடன் அந்நூல்களை உரையாசிரியர் விளக்கத்துடன் படித்து குறிப்பெடுப்பதற்கு நல்கியும் அவ்வப்போது ஐயங்களுக்கு செரிவான கருத்துடன் விளக்கம் அளித்தும் இறுதி வடிவம் அமைத்து இத்தொகுப்பு எத்தன்மையதாக அமைய வேண்டும் என்ற கண்ணோட்டத்தில் அவரை அணுகினோமோ, எங்கள் எண்ணத்தைக் காட்டிலும் பன்மடங்கு செம்மையாக அமைய வழி வகுத்துக் கொடுத்துள்ளார். அவருக்கு நாங்கள் கடமைப்பட்டுள்ளோம்.

விளக்கம்

*எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்* (தொல்காப்பியம்)

எல்லா உயிர்க்கும் இன்பம் இயல்பாகக் காணப்படுகிறது. இன்பம் என்பது ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்வது. அவ்வாழ்வு எல்லா உயிரினங்களுக்கும் உள்ளது.

*இன்பம்:* பலவகையிலும் ஒத்த நலன்களையுடைய ஒருவனும் ஒருத்தியும் கூடுங்காலத்து பிறப்பது இன்பம். அதனைஇன்னதென்று சொல்லல் விளக்க முடியாது. அவர்கள்அகத்தால் அதாவது உள்ளத்தால் தான் உணரமுடியும் என்பர்.

*"உலக வளர்ச்சி பசியால் உண்டு; உள்ள வளர்ச்சி காமத்தால் உண்டு. அரும் பெருஞ்சான்றோர் சிலர் ஞால நலங்கருதிப் பசி நோற்கலாம், காமம் நோற்கலாம். இஃது இயற்கையும் அன்று; உயிர்ப் பொது விதியும் அன்று. பசியும் காமமும் நிறையா உணர்ச்சிகள். இவற்றுக்குத் திங்கள் போல் நிறைவும் குறைவும் மாறிமாறிவரும். மாறிமாறி வரும் இச்சுழற்சியால் ஞாலம் வாழுகின்றது. உயிர்கள் பிறந்து வாழ்கின்றன". என்று மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கம் அவர்கள் 'தமிழ்க் காதல்' என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.* (பக்கம் 37)

மானிட வாழ்வின் இளமைக் காலத்தில் ஆணும்-பெண்ணும் கணவன்-மனைவி என்ற நிலையில் இல்லறம் நடத்த வழி செய்வது 'திருமணம்' என்னும் சமுதாய கட்டுப்பாடு. இது இன்றியமையாதது. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

தாய் வழியாக வந்த உறவாலும், தந்தை வழியாக வந்த உறவாலும் அல்லது தாய்வழி மற்றும் தந்தைவழியாக இல்லாத உறவாலும் அல்லது ஆண் பெண் இருவரும் ஒன்றாகப் பழகிய பழக்கத்தால் காதல் உணர்வால் ஒன்று பட்டவருக்கும் மக வீட்டாரும், பெண் வீட்டாரும் ஒன்று கலந்து மணம் பேசி திருமணம் செய்து வைக்கப்படுகிறது.

பெற்றோர் தம் மக்களுக்கு திருமணம் செய்து வைப்பது தொன்று தொட்டு இருந்து வரும் வழக்கமாகும். தமிழ்ச் சமுதாயத்தில் அன்று நடந்த திருமண முறைகளை தொகுத்து 'நல்லாவூர் கிழார்' சொல்லியுள்ளார். (அகநானூறு பாடல் 86 தொகுப்பில் காண்க.) பெற்றோர், சுற்றம், நட்பு, சான்றோர் இருந்து, திருமணம் நடத்தி வைக்கப்படுகிறது. திருமணத்தில் நடைபெறும் சடங்குகள் ஒவ்வொரு இனத்திற்கும், ஓர் இனத்திலும் பகுதிக்குப் பகுதி மாறுபடுகிறது. நம் பெரியவர்களும் அவர்கள் இளமைக் காலங்களில் நிகழ்ந்த திருமணங்களில் நடைபெற்ற சீர் சிறப்புக்களைக் காட்டிலும் குறைவான சடங்குகளே இக்காலத்தில் நடைபெறுவதாக கூறுவதை நாம் கேள்விப்பட்டு வருகிறோம். எனவே மாறி மாறி வரும் காலத்திற்கேற்ப அவ்வப்போது நிலவும் சமுதாய சூழலுக்கு ஏற்புடைய மாற்றங்களை ஏற்றுக் கொண்டு 'திருமணச் சடங்குகள்' நடைபெறுவனவாகும் என அறிகிறோம்.

திருமணமானபின் கணவன் மனைவி இல்லறப் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ளுகின்றனர். இல்வாழ்க்கைக்கு பொருட் செல்வம் இன்றியமையாதது. 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு' என்று குறட்பாவில் (247) இவ்வுலக வாழ்க்கைக்கு பொருட் செல்வத்தை தேட வேண்டும் என்று திருவள்ளுவர் குறிப்பால் உணர்த்துகிறார். இளமைக் காலத்துக்கும் முதுமைக் காலத்துக்கும் செல்வம் தேவைப்படுகிறது. செல்வம் நிலையற்ற தன்மையது. வாழ்க்கையின் இளமைக் காலமாயினும், முதுமைக் காலமாயினும் அச்செல்வத்தை ஈட்டலாம். எனவே செல்வம் ஈட்டுவதற்கு கால நிர்ணயம் இல்லை.

வாழ்க்கைக்கு செல்வம் தேவைதான். ஆனால் செல்வமே வாழ்க்கையாகிவிட முடியாது. அதே சமயம் இளமை கழிந்தால் மீண்டும் வராது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும் ஆகையால் நாம் ஈட்டும் செல்வமானது, இல்லறக் கடமைகளை நிறைவேற்றுவதற்காகவும், கணவன் மனைவி இன்பமுடன் வாழ்வதற்காகவும் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு இல்லறம் சிறக்க வாழும் மனைவியானவள், இப்பிறப்பு போய் மறு பிறப்பு உண்டாயினும் என் கணவன் நீயே ஆவாய், நின் மனமொத்த மனைவியாக நானே அமைவேனாக (பிறவி தோறும் நாமே கணவன் மனைவியாக வாழ்வோமாக) என்று பெருமிதங்கொண்டு சொல்லுவாள் என்கிறது.
குறுந்தொகை பாடல் 49:3-5

*இம்மை மாறி மறுமை ஆயினும்,*
*நீ ஆகியர் என் கணவனை*
*யான்ஆ கியர் நின் நெஞ்சுநேர் பவளே!*

அத்தகைய மனைவியின் நெஞ்சுநேர்பவனாக அவள் இதயத்தில் என்றும் நிலைத்திருக்கும் கணவனாக வாழ வேண்டும் என்பது குறிப்பால் உணர்த்தப்படுவதை நினைவில் கொள்ள வேண்டும.

*சிதலை தினப் பட்ட ஆல மரத்தை*
*மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்*
*குதலைமை தந்தைகண் தோன்றில் தான் பெற்ற*
*புதல்வன் மறைப்பக் கெடும்.* (நாலடியார் 19)

பல ஆண்டுகள் விழுது விட்டு விழுதுவிட்டு தழைக்கும் மரம் ஆலமரம். வேறுவகை மரங்களில் இல்லாத தனிச் சிறப்பு இம்மரத்தில் இருந்து வரும் விழுதுகள் இவ்விழுதுகள் வளர்ந்து தாய் மரம்போல் நிலத்தில் வேறூன்றி உரம் பெற்று பல ஆண்டுகள் நிலைத்து நிற்கிறது.

கறையானால் அரிக்கப்பட்ட ஆலமரத்தினை விழுதுகள் (குழந்தைகள்) தூணா நின்று கீழே விழாமல் தாங்குகின்றன. இது போல் தந்தைக்கு வயது முதிர்ந்து சோர்வும் தளர்ச்சியும் உண்டாகும் போது அவர் பெற்று வளர்த்து நன்மக்களாக்கிய புதல்வர்கள் முன்வந்து சோர்வு ஏற்படாமல் காப்பதனால் அவர்கள் முதுமையிலும் தளர்வும் சோர்வும் அறியாமல் வாழ்வார்கள். ஆலமரம் போல் தழைத்து அவர்கள் நற்குடியு தாழாதிருக்கும்.

இல்லறவாழ்வின் இறுதிக் கட்டத்தில் உள்ள பெற்றோர் உணவு, உறைவிட மருத்துவ வசதிகளுக்கு மேலாக தம் மக்கள், மருமக்கள், பேரக் குழந்தைகள் தம்மை சூழ்ந்திருக்கவும், இதம் தரும் உற்றார் உறவினர் கூடியிருந்து காட்டும் அன்பும் பாசமுள்ள அரவணைப்பையே விரும்புகிறார்கள். இது இயல்பு. ஆகையால் அவர்களைத் தனிமைப்படுத்தாமல் அவ்வப்போது சிறிது நேரமாவது அவர்களுடன் உரையாடி நமது அன்பைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். பெற்றோர் வாழ்க்கையில் எவ்வளவுதான் வளமை இருந்தாலும் முதுமையில் உறவுகளுடன் கூடி மகிழ்ந்து பங்கிட்டுக் கொள்ளும் மகிழ்வுக்கு ஈடு இணையேது.

வாழ்க்கை செழித்தோங்கி சிறந்திடவும், விளங்கிடவும் அனைத்து நலங்களும் வளங்களும் பெருகிடத் தேவை உறவுகள், அப்போது தான் வாழ்க்கை ஆல்போல் பெருகி அருகுபோல வேரூன்றி மூங்கில் போல் கிளை கிளைத்து சுற்றம் சூழ வாழையடி வாழையென மகிழ்ந்து வாழமுடியும், நாமும் வாழ்ந்து அவர்களையும் மகிழ்ச்சி செய்ய இயலும்.

அன்பைப் போற்றி அறவழி நின்று புகழோடு வாழ்ந்து இல்லறம் சிறந்து இறைவன் அருளால் பெறவேண்டியனபெற்று நற்குடிமகனாக வளர எங்கள் அன்பான நல்வாழ்த்துக்கள்

## விருப்பம்

கோவை மாவட்டம், செங்குந்த முதலியார் சமூகத்தில் நடைபெற்று வரும் திருமண முறை, சீர் சிறப்புக்கள் இத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

உரிமைப் பெண் மாப்பிள்ளை என்ற நிலை மாறி தூரத்து உறவுகளிலிருந்தும் பெ

எடுத்து உறவுகள் விரிவடைந்து வருகின்ற இக்கால சூழ்நிலையில் வெவ்வேறு பகுதிகளில் உள்ள நம்மவர்களின் குலம் (கூட்டம்) நிலவிவரும் திருமண முறைகள் சீர் சிறப்புக்களை ஒருவருக்கொருவர் தெரிந்து கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயமாகிறது.

நம் இன மக்கள் பல இடங்களில் பரவி, அப்பகுதியிலுள்ள மற்ற சமூக மக்களுடன் ஒன்று கூடி வாழ்ந்து வருகிறோம். இவ்வாறு மற்ற இனத்தாரோடு வாழ்ந்து வருவதால் ஒருவரோடு ஒருவர் கூடி வாழ்ந்து வரும் நாட்களில் அவரவர் அவரவருக்கே உரிய வழக்க ஒழுக்கங்களை முழுவதும் மாற்றியமைக்காமல் தங்களின் பெரும்பாலானவற்றை முன்னிருந்தபடியே வைத்துக் கொண்டு கடைப்பிடித்து வருகிறோம். எனவே திருமணம், சீர் சிறப்புக்கள் ஒரே மாதிரி இல்லாமல் சிற்சில வேறுபாடுகளுடன் ஒவ்வொரு பகுதியிலும் நடைபெற்று வருவதை நாம் கண்ணாரப் பார்த்து வருகிறோம். ஒரே முறையாக கொண்டு வருவது உடனடி தீர்வாக அமையாது.

ஆகையால் மற்ற பகுதிகளில் வாழ்ந்து வரும் நம் இன மக்கள், அவரவர் பகுதியில் நடைமுறையில் உள்ள வழக்கத்தை தொகுத்து எழுதி வைத்தால் நமக்கு ஒட்டு மொத்தமாக நம் செங்குந்த முதலியார் திருமண முறைகள் என்ற வரலாற்று பெட்டகம் அமையும் என்ற கருத்தும் நிலவுகிறது. எனவே நம் சமுதாயத்திற்குச் செய்யும் சிறு கடமையாகக் கருதி ஆர்வமுடையோர் முயற்சி மேற்கொள்வது நலம்.

மரபுகள், வழக்கங்கள் ஒரு காலத்தில் தோன்றி அக்காலத்திலேயே மறைந்துவிடுவதில்லை. அவை மக்களின் வாழ்க்கையுடன் பின்னிப்பிணைந்து விடுகின்றன. தலைமுறை இடைவெளியின் காலச் சூழலுக்கு ஏற்றவாறு சில மாற்றங்கள் செய்வது தவிர்க்க முடியாதது. மாற்றங்கள் செய்வது என்பது வளையல்காரர் பெண்களுக்கு வளையல் அணிவிப்பது போன்றது. வளையல் உடைந்து விடாமல் இருப்பதில் கவனமாக இருப்பதுடன் பெண்கள் கரங்களுக்கு பொருந்துவதாகவும் கரங்களில் காயம் ஏற்படாமலும் பார்த்துக் கொள்ளும் வளையல்காரர் பாங்கினைப் போல நம் முன்னோர்கள் பண்டு தொட்டு கடைப்பிடித்து வரும் மரபுகள், வழக்கங்களில் பெரிய மாற்றங்கள் இல்லாமல் புதுமையைப் பிணைக்கும் போது 'மரபின் இழை' அறுபடாமலும் மக்கள் ஏற்கத்தக்க வகையிலும் இருக்குமாறும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

நன்றி

இத்தொகுப்பு தொகுக்கும் எண்ணத்தை உறவினர் பலரிடம் தெரிவித்தோம். அவர்கள் நடைமுறையிலுள்ள திருமணச் சடங்குகள், சீர் சிறப்புக்களை விளக்கினார்கள். அவர்களுக்கும் 'வரைவு' தொகுப்பை படித்தபின் கருத்துக்களைத் தெரிவித்த உறவினர்களுக்கும் எங்கள் நன்றி.

பொதுப் பணித்துறையில் இருவரும் ஒத்த எண்ணத்துடனும் பணிக்கால இறுதிவரை

கொண்ட கொள்கையில் எவ்வித சமரசத்துக்கும் இடமின்றி கடமையாற்றி பணி ஓய்வு பெற்றோம். உறவினரும், செயற் பொறியாளராக ஓய்வு பெற்றுள்ள சேலம் இன்ஜினியர். சி.ராமசாமி, பி.இ., அவர்களை இங்கு குறிப்பிடுவதில் பெருமைப் படுகிறோம்.

அடுத்து மிகப் பொறுமையோடும் அமைதியோடும் கையெழுத்துக் பிரதியைப் படித்து ஆங்காங்கே உரிய கருத்துக்களை புகுத்தியும் கணிணியில் வடிவமைத்துக் கொடுத்தவர் எங்கள் உறவினரும் என்றும் நட்பும் நலமும் மட்டுமே நாடும் கோவை இராமலிங்கம் காலனி திரு. முருகன், என்றும் எங்கள் நினைவிலுள்ள அவருக்கு எங்கள் அன்பு.

இனி இதனை அச்சிட்டு நல்ல பணியினைச் செய்து உதவிய **ஸ்ரீ வாரி இம்ப்ரஸ், கோவை - 26** அச்சகத்தினை மறக்க இயலாது.

அனைத்துக்கும் மேலாக எங்களை இப்பணியில் ஈடுபட அருள்புரிந்த இறைவன் அருட்கருணையை நினைவில் கொள்ளுகிறோம்.

*"யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும்*
*தாமே பெறத் தந்த"*

வேலவன் எம்பெருமான் முருகனது திருவடி மலர்களை நெஞ்சினில் இருத்தி எங்கள் குலதெய்வம் 'கோழிக்கூட்டு' பொங்காளியம்மன் திருவருளை நினைந்து,

*பங்கயப் பாதம் போற்றி பரிமளப் பைங்கிளி போற்றி!*
*பொங்கிய தமிழைக் கேட்டு பொன்மாலை தந்தாய் போற்றி!*
*குங்குமம் தருவாய் போற்றி! கோலமா மஞ்ஞை போற்றி!*
*பொங்காளி அம்மா உன்றன் பூங்கழல் போற்றி போற்றி!*

என போற்றி வணங்குகிறோம்.

இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள திருமணச் சடங்குகள், சீர் சிறப்புக்கள் சில இடங்களில் சுருக்கமாகவும், சில இடங்களில் விளக்கம் தோன்றும் வகையில் விரிவாகவும், சில செய்திகளுக்கு சுவை கூட்ட உவமைகளும் எடுத்தாளப்பட்டுள்ளன. முழுமை பெற்றதாகக் கருதாமல் சிறிய வழிகாட்டியாக கருதிக் கொள்ளுமாறு, கேட்டுக் கொள்ளுகிறோம். தங்கள் கருத்து மற்றும் விமர்சனங்களை அன்புடன் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

நம் வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் நம்முடைய நினைவுகளெல்லாம் உணவு பொருள் தேடுவதிலும், இல்லத்திற்கு வேண்டுவன திரட்டுவதிலும், அலுவலகப் பணி செய்வதிலும் பலவாறு கழிந்து போகின்றன. அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றபின் அலுவலகக் கடமைகளிலிருந்து விலகியுள்ளோம். இப்பொழுது கிடைக்கும் ஓய்வினைச் சமுதாயப் பணிக்கு பயன்படுத்தக் கருதினோம்.

அதன் முதற்படியாக கன்னி முயற்சியாக எங்கள் குலதெய்வம் 'கோழிக்கூட்டு' பொங்காளியம்மன் வரலாறுடன் வழிபாட்டு நெறிக்குத் துணையாக விளங்கும் வழிபாட்டு பாடல் தொகுப்பு ஒன்றினை 1997ல் வழங்கினோம். அத்தொகுப்பு தங்களுக்கு நல்ல பயனுள்ளதாக இருந்து வருகிறது எனும் கருத்து பலரிடமிருந்து வரப்பெற்றோம். அது எங்களுக்கு மகிழ்ச்சியளிக்கிறது.

இரண்டாம் படியாக 'எங்கள் திருமண முறைகள்' என்னும் இத்தொகுப்பினை எழுதியுள்ளோம்.

நூல்களைக் கற்க வேண்டும். கற்பதோடன்றி நம்போல் உலகம் உய்யும்படி கற்பிக்க வேண்டும் என்பது சான்றோர் அறிவுரை.

நம் 'திருமண முறைகளை' பலரும் படித்து அறிந்து கொள்வதற்காகவும், அறிந்ததை மற்றவர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயனடையும் ஆர்வத்தில் இப்பதிப்பினை உடன்பிறந்த தம்பி மா. முருகேசன் தம்பதியர் தம் அறுபதாம் அகவை நூலாக வழங்குவதில் மனநிறைவு எங்களுக்கு.

**"அம்மையப்பன் இல்லம்"**
3/10A கூத்தாண்டை கோயில் வீதி,
வடவள்ளி, கோவை-641 041
திருவள்ளுவர் ஆண்டு 2034
சுபானு வருடம் ஐப்பசி திங்கள்
நவம்பர் 2003.

மா. சுப்பிரமணியன்
மு.ரா. இராமலக்குமி

# எங்கள் திருமண முறைகள்

அன்பும் அருளும் இரக்கமும் ஓங்குக
இன்பமும் மகிழ்ச்சியும் எங்கும் தங்குக

முன்னுரை

ஆண்-பெண் என்ற படைப்புக்கள் இயற்கையின் நியதி, ஆண் பெண் இணைந்து வாழ வேண்டும் என்பதுதான் இயற்கையின் கட்டளை, சந்ததியாகிய நூல் அறுந்துவிடாமல் இருக்க மக்கட்பேறு அவசியம்

*பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த*
*மக்கட்பேறு அல்ல பிற* (குறள் 61)

என்று திருக்குறளில் மக்கட்பேறு சிறப்பிக்கப்படுகிறது.

இல்வாழ்க்கையில் அன்பு முதலில் பெருகும் இடம் தாம் பெற்று வளர்க்கும் குழந்தைகள். இல்லறப் பற்றை வளர்ப்பது குழந்தைகள், பெற்றோர் இருவரும் தம் குழந்தைகளை தம் உயிர் போலும் இரு கண்கள் போலும் போற்றி வளர்க்கின்றனர்.

நல்ல மக்கட் பேறு பெற ஆண்-பெண் புனித உறவு இன்றியமையாதது. ஆணும் பெண்ணும் அன்பின் பிணைப்பால் கட்டுண்டு புலனின்பத்தை நெறிப்படுத்தியும், வழிப்படுத்தியும் சமுதாயத்தில் இல்லறக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு பெரியோர்கள் வகுத்த முறை திருமணம் இதுவே கணவன் மனைவி என்ற உறவில் இல்லறமாக (குடும்பம்) மிளிர்கிறது.

குடும்பம் என்பது அன்பாலும் பாசத்தாலும் ஆனது. அது இரண்டோ அல்லது அதற்கு மேற்பட்ட தொகுதி. அவர்கள் தந்தை, தாய், மகன், மகள் என்னும் உறவில் உள்ளவர்கள். ஒரு குடும்பம் பாட்டன், பாட்டி முதல் பேரன், பேத்தி வரை உள்ள தொகுதி. அது ஒற்றுமையோடும், பிரிவினையின்றி இருக்கும். இந்த குடும்பம் தான் பாசம் நேசம் சகிப்புத்தன்மை விட்டுக்கொடுத்தல், வெற்றி, மகிழ்ச்சி, என்ற எல்லாவற்றையும் கற்றுத்தருகிறது. இதனால் அன்றோ நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம் என்றனறோ!

நாடு, மொழி, நன்னெறி மூன்றும் ஈடு இணையற்ற பெரும் பொருள்கள். ஆண்-பெண் இருபாலராகிய ஒவ்வொருவரும் வேற்றுமையின்றி அன்பு மேற்கொண்டு இன்பமாகசுற்றத்துடன் கருத்தொருமித்து ஒற்றுமையாக உலகம் உய்ய வாழ்க்கை நடத்துவது அவசியம்.. அதனை தமிழ் சமுதாயம் பண்டைகாலத்தில் இருந்து வாழ்வியல் நெறியாகக் கடைபிடித்து வந்துள்ளது என்பது முருகவேளையும் திருமாலையும் வழிபடுவோர் வேண்டினர் என்பதை சங்க இலக்கியம் பரிபாடலில் இருந்து நாம் அறிகிறோம்.

நன்மையே விரும்புகின்ற எம் சுற்றத்தாரோடும் கூடி ஒனறுபட்டு நின் அழகிய நெடிய பரங்குன்றிடத்திற்கு வந்து நின் (செவ்வேள்) அடியுரையும் வாழ்வாகிய இந்த இன்ப வாழ்வு இன்றைக்கும் போலவே என்றைக்கும் எமக்கும் எம் சுற்றத்தாருக்கும் பொருந்துவதாக இந்த சிறந்த பேற்றினை எமக்குத் தந்தருள்வாயாக என மனம் உருகி முருகவேளை வேண்டும் பரிபாடல் வரிகள்

*"நன்றமர ஆயமொடு ஒருங்கு நின் அடியுரை*
*இன்றுபோல் இயைகெனப் பரவுதும்*
*ஒன்றார்த் தேய்த்த செல்வநின் தொழுதே"* (பரிபாடல் 21:68-70)

திருமாலே யாம் எல்லோரும் எம் சுற்றத்தோடு ஒருங்கே என்றும் நின் திருவடிகளைப் போற்றிப் பணிவோம். பெருமானே இந்தச் சிறப்பை எமக்குத் தந்தருள்வாயாக என மனமுருகி திருமாலை வழிபடுவோர் வேண்டினர். என்பதை

*"காமரு சுற்றமோ டொருங்கு நின் அடியுறை*
*யாமியைந்து ஒன்றுபு வைகலும் பொலிகென*
*ஏமுறு நெஞ்த்தேம் பரவுதும்*
*வாய்மொழிப் புலவ நின் தாள் நிழல் தொழுதே"* (பரிபாடல் 1:64-67)

என்ற பாடல் அடிகளால் விளங்குகிறது.

பண்டைய இந்தியச் சிந்தனை மரபுகளை அறிந்து கொள்ளத் துணை செய்யும் நூல்களில் இன்று குறளும் கீதையும் முக்கியமானவை.

*பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்* (குறள் 972)

என்பது வள்ளுவர் வாய்மொழி. உலகில் பிறந்த மனிதருள் பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை. செய்யும் தொழில் முறையில் உயர்வு தாழ்வு இல்லை. செய்கின்ற தொழில் வேறுபாடினால் அவர்களுக்குள் வேறுபட்ட பல சமூகத்தவர் ஆகின்றனர்.

ஒவ்வொரு சமூகத்தவருக்கும் அவர்களைச் சார்ந்தவர்மேல் பற்று உண்டாவது இயற்கை, தவிர்க்க இயலாததும் கூட இவர் யாரோ எவரோ எனக் கருதாமல் இவர் நம்மவர் என்ற ஒரு வகை அன்பும் பாசமும் பற்றும் மேலோங்கி வளர்ந்து வருவது நடைமுறையில் காண்கிறோம்

நம் சமூகத்தவர் தாம் ஒன்றுகூடி ஒருபகுதியில் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தபோது பின்பற்றிய பழக்க வழக்கங்கள் காலப்போக்கினாலும். தொழில் வாணிகம் அலுவல் போன்ற பிற காரணங்களால் பல இடங்களிலும் பரவி வாழவதனாலும் இன்று நடைமுறையில் சில இல்லாததாலும் விளக்கம் கூறுவர் இன்றியும் உள்ளன.

எனவே நடைமுறையிலுள்ள பல முறைகளைத் தொகுத்து ஒழுங்குபடுத்தி எழுதினால் நமது பண்பாட்டை வெளிப்படுத்த முடியும் என்ற எண்ணத்திலும், மரபுகள் வழக்கங்கள் கால வெள்ளத்தின் ஓட்டத்திலும், சுற்றுச்சூழ்நிலையாலும் மறைந்து விடாமல் காக்கும் முயற்சியாலும், நம் முன்னோர்களின் வாழ்வியல் முறைகளை அறிந்து கொள்வதன் மூலம் நம்முடைய வாழ்வை செம்மைப்படுத்தி பயன்பெறும்

வாய்ப்பும் உள்ளது என்பதாலும் நாம் வாழும் தலைமுறையும், வளரும் தலைமுறையும், வரவிருக்கும் தலைமுறையும் அறிந்து பின்பற்ற வேண்டும் என்ற ஆர்வத்தில் "திருமண முறைகளை" தொகுக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது.

## தலைப்பு

எந்த ஒரு தொகுப்பிலும் அதனுள் எவ்வளவு பொருள் பொதிந்து இருந்தாலும் அந்தத் தொகுப்புக்கு உரிய தலைப்பு மிகவும் அவசியம்.

இருமனம் இணைந்தால் திருமணம் இது எல்லா சமூகத்தவருக்கும் பொருந்தும் ஒவ்வொரு சமூகமும் அவரவர் மரபில் கடைப்பிடித்துவரும் வழிமுறைப்படி திருமணங்கள் செய்துவருகின்றனர்.

ஆகையால் 'திருமண முறைகள்' என்று தலைப்பிட்டால் இந்தத் தொகுப்பு எல்லா சமூகத்திற்கும் பொருந்தும் எனக் கருத வாய்ப்பளிக்கும். செங்குந்த முதலியார்கள் 'திருமண முறைகள்' எனக்கொண்டாலும் அதிலும் சில பகுதிகளில் உள்ள திருமண நிகழ்வுகளில் சில வேறுபாடுகளைக் காண்கிறோம்.

இத்தொகுப்பு கோவை மாவட்டம் செங்குந்த முதலியார் சமூகத்தில் சிறப்பிடம் பெற்று நடைமுறையிலுள்ள திருமண முறைகள் பற்றி எழுதியுள்ளதால் " எங்கள்" என்ற சிறப்பு அடைமொழி கொடுத்து *"எங்கள் திருமண முறைகள்"* என்ற தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

## எண்ணம்

ஒன்றைப்பற்றி அறியவேண்டுமானால், பொதுவாக கீழ்காணும் வழிகளில் அறியலாம் என்பது பெரியோர்களின் வாக்கு:

1. கண்ணால் நேரில் கண்டு அறிதல்
2. பிறர் சொல்லுகின்ற சான்றுகளால் அறிதல்
3. பிறர் எழுதியுள்ள நூல்களின் மூலம் அறிதல்

கூடியவரை ஆதாரங்களைச் சேகரித்துக் கொண்டும், எங்கள் குல மக்கள் தந்த சேதிகளை உள் வாங்கிக் கொண்டும், நூல் ஆசிரியர்கள், அவர்கள் நூல்களிலுள்ள கருத்துக்கள் மற்றும் சங்கப் பாடல்கள், கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாடியதாக மக்கள் நம்பிக்கையிலுள்ள 'மங்கல வாழ்த்துப்' பாடலில் பொருத்தமான கருத்துக்கள் உள்ள சில பகுதிகளையும் ஆங்காங்கே சேர்த்து இத் தொகுப்பினை எழுதியுள்ளோம்.

## வாழ்வியல்

பண்டைய நூல்களில் மானிட வாழ்க்கை நான்கு வாழ்வியல் நிலைகள் கொண்டதாக குறிப்பிடப்பட்டுள்ளது.

1. *பிரம்மச்சரியம்* : புலன்களை நெறிப்படுத்தி வாழ்வியலைக் கற்றுக் கொள்ளும் காலம்
2. *இல்வாழ்க்கை* : இது திருமணம் செய்து கொண்டு மனைவி மக்களோடு

வாழும் வாழ்க்கை. இக்காலத்தில் தொழில் செய்து அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும். வையத்துள் வாழ்வாங்கு வாழ இல்வாழ்க்கை அமைகிறது

3. *வனவாசம்* : இந்நிலையில் ஒருவர் வீட்டிலேயே இருந்தாலும் குடும்பப் பொறுப்புக்களில் இருந்து விலகி வாழ்தல். அறப்பணிகளில் ஈடுபடுதல், தனது அறிவையும் ஆற்றலையும் பொது நல நோக்கில் சமுதாயத்திற்கு அர்ப்பணித்தல்.

4. *சந்நியாசம்* : எல்லாவற்றையும் துறந்து பற்றற்று வாழ்தல்

## இல்லறம்

அறம், பொருள், இன்பம் என்னும் மக்கள் வாழ்வியல் தத்துவத்தை விளக்குவது திருவள்ளுவர் படைத்துள்ள திருக்குறள்.

இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு பற்றி பேசும் மூன்று அதிகாரங்கள் அறத்துப் பால் இல்லறவியலில் விளக்கியுள்ளார் திருவள்ளுவர்.

ஒருவனுடைய உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத துணை மனைவி ஆவாள். அவளுக்கு 'வாழ்க்கைத் துணை' என்ற சிறப்பை அளித்துள்ளார் திருவள்ளுவர்

*மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை* (குறள் 51)

கணவனும் மனைவியுமாகிய இருவர் ஒத்த மனம் உடையவராய் உலக நன்மை கருதி அன்பும் அறனும் சார்ந்து ஒன்றாக வாழும் வாழ்க்கை இல்வாழ்க்கை.

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.* (குறள் 45)

பிரம்மச்சரியம், வனவாசம், சந்நியாசம் ஆகிய வாழ்வியல் நெறியில் உள்ளவர்கள் தங்கள் கடமையை நன்கு செய்வதற்கு இல்லறத்தாரே ஆதாரமாக உள்ளனர்.

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை* (குறள் 41)

இல்லறத்தைத் துறந்து, இல்வாழ்க்கை இன்பங்களைத் துறந்து அறவாழ்க்கை வாழ்பவர்களுக்கும், வாழ்க்கையை நடத்த இயலாத நிலையில் தம்மை நாடி வருவார்க்கும் இல்லறத்தான் துணையாவான். மேலும் பித்ருக்கள், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவரையும் அறநெறி தவறாமல் போற்றுதல் இல்லறத்தான் பொறுப்பும் கடமையும் ஆகும் என திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

*துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்*
*இல்வாழ்வான் என்பான் துணை* (குறள் 42)

*தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை* (குறள் 43)

தானும் அறத்தோடு நின்று மற்றவரையும், அறவழியில் வாழச் செய்யும் இல்வாழ்க்கை தவம் செய்வோரைவிட மிக்க வலிமை உடையது என்றும், வாழ வேண்டிய அற நெறியில் நின்று உலகில் வாழ்பவன் வானுலகத்திலுள்ள தெய்வமாக இங்கு

மதிக்கப்படுவான். என்றும் இல்லறத்தின் மேன்மையை பொய்யாமொழிப் புலவர் திருவள்ளுவர் உணர்த்துகிறார்.

*ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை*
*நோற்பாரின் நோன்மை உடைத்து* ( குறள் 48)

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்* (குறள் 50)

இவற்றை எல்லாம் உற்று நோக்கும் போது மானிட வாழ்வில் இல்லறம் உயர்வான இடத்தில் வைக்கப் பட்டுள்ளது.

இல்லற வாழ்வில் ஈடுபட்டுள்ளவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்கள் கடைமைகளாவன:

"பெரியோர்களை எதிர்கொண்டு அழைப்பது, விருத்தாளிகளுக்கு மரியாதை செய்வது, வேலைக்காரர்களைக் காப்பாற்றுவது, இன்சொல் மற்றும் கொடை ஆகியவற்றால் எல்லோரையும் திருப்தி செய்வது, அநியாயமான வழிமுறைகளை கைவிடுவது, யாரிடமும் விரோதம் பாராட்டாமல் இருப்பது. தன் மனைவியிடம் தவறில்லாமல் நடந்து கொள்வது, தன்னுடைய பிள்ளைகளுக்கு நல்ல கல்வி கிடைக்குமாறு செய்வது, தன்முயற்சியினால் தன் குலத்திற்கே பெருமை ஏற்படுத்துவது ஆகியவை இல்லறத்தானின் தர்மங்கள்.

"இல்லறத்தான் பெரியோரை மதித்து நடக்க வேண்டும் பிறர் பொருளைக் கவர நினைக்கக் கூடாது. பிறரை அவன் யாசிக்கக் கூடாது. மன உறுதியுடன் தன் திறமையையே ஆதரவாகப் பெற்று அவன் வாழ வேண்டும் எளிதில் சீரணிக்கக்கூடிய நல்ல ஆகாரத்தை அளவோடு உண்ண வேண்டும். கடுமையாக பேசக்கூடாது. வசிப்பதற்கு இடம், குடிக்க தண்ணீர் போன்றவற்றை மற்றவர்களுக்குக் கொடுக்க முன்வரவேண்டும். வரவுக்குத் தக்கபடி செலவு செய்ய வேண்டும். பிறரைத் துன்பத்தில் ஆழ்த்தக் கூடிய எந்தச் செய்கையையும் தவிர்க்க வேண்டும். புண்ணியம், பாவம் ஆகிய இரண்டுக்கும் தன்மனதையே சாட்சியாக கொண்டு, அவன் நியாயமான முறையிலே நடந்து கொள்ள வேண்டும். சொல், செயல் சிந்தனை ஆகிய மூன்றிலும் தவறான வழிகளைத் தவிர்ப்பது இல்லறத்தானின் கடமை." (1)

சுருங்கக் கூறுவதானால் ஒருவர் தாம் மட்டும் உலகியல் அனுபவங்களை நிறைவாக அனுபவித்துமட்டுமல்லாமல் தம்மைச் சார்ந்த குடும்பம், சமூகம், என்பவற்றையும் நிறைவாழ்வு வாழவைக்க துணைபுரிவது இல்வாழ்க்கை. இல்வாழ்க்கையின் புனிதத் தன்மையை கருத்தில் கொண்டு நல்லறத்தோடு வாழ்வது நமக்கும், சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் உயர்வு தரும்.

இன்னும் இல்லறத்தின் மேன்மையை விவரித்தால் பெருகும் என்று கருதி இதனை இவ்வளவில் நிறுத்தி எடுத்துக் கொண்ட தலைப்பின் விளக்கம் முன் வைக்கப்படுகிறது.

திருமணம்

இல்லறத்தின் அவசியமும் அதன் மேன்மையையும் அறிந்ததால் அவ்வில்லறம் மானிட வாழ்வில் எவ்வாறு நிகழ்கிறது என்று அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் மேலிடுவது இயல்பு.

ஆண்-பெண் இருவரும் ஒத்த அன்புடன் கணவன் மனைவி என இணைந்து வாழும் (இல்வாழ்க்கை) நிலையினை ஏற்படுத்திக் கொள்ளும் சமுதாயக்கட்டுப்பாடு - திருமணம். இது பெரியோர்கள் வகுத்த மங்கல வழக்கு தொன்று தொட்டு நடைமுறையில் உள்ள முறையும் ஆகும்.

வடமொழி நூல்களில் எட்டு வகையான திருமணங்கள் குறிப்பிடப்பட்டுள்ளது என கூறப்பட்டுள்ளது. அந்த எட்டு வகை திருமணங்கள் விவரம் இணைப்பு-1 ல் உள்ளது.

'பிரசாபத்திய மணம்' - கன்னிகையைப் பெற்றோரும் பிள்ளையைப் பெற்றோரும் மனமொருமித்து, பந்து மித்திரரோடு மணம் முடிப்பது, இக்காலத்தில் இம்மண முறை பொதுவாக உள்ளது.

பருவமடைந்த ஆணும் பெண்ணும் எதிர்பாராமல் எதிர்ப்பட்டு காதல் கொண்டு நெஞ்சங்கலந்து மகிழ்ந்து வாழ்வதை பண்டைய தமிழ்ச்சமுதாயம் கடிய வில்லை. ஆனால் தான் காதலித்த நங்கை நல்லாளை நாடு அறிய 'திருமணம்' புரிந்து சுற்றமும் நட்பும் மகிழ இல்லறம் நடத்துவதையே பெரிதும் விரும்பி வலியுறுத்தியுள்ளனர்.

*'தொன்று இயல் மரபில் மன்றல் அயர'*

(அகநானூறு 112:16)

தொன்று தொட்டு வரும் முறைப்படி திருமணம் நிகழ்ந்திட எனவும்

*'மன்றல் வேண்டினும் பெருகுவை ஒன்றோ*
*இன்றுதலை யாக வாரல் வரினே'* (அகம் 318; 8-9)

*'புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றிற்*
*புனையிருங் கதுப்பின் நின் மனையோள் அயரம்*
*பாலுடை அடிசில் தொடீஇய ஒரு நாள்*
*மாவன் தோன்றல்'* (அகம் 394:9-12)

என்னும் அகநானூறு பாடல் வரிகளிலிருந்தும் அறிகிறோம்.

*'இரு பெருங்குரவரும் ஒரு பெரு நாளில் மணவணி காண மகிழ்ந்தனர்'*

என சிலப்பதிகாரத்திலும் (1: 40-41) சுட்டியுள்ளது காணத்தக்கது.

உமது அழகிய முன்கையை உம் சுற்றத்தார் தர நான் பிடிக்க நாட்டில் உள்ளவர் எல்லாம் அறிய நம் திருமணத்தை நிகழ்த்துவோம்.

*'நேர் இறை முன்கை பற்றி நுமர்தர*
*நாடு அறி நல்மணம் அயர்கம்'*

என்றும் குறிஞ்சி பாடல் 231-232 வரிகள் பெரியோர்கள் உறுதி செய்யும்

திருமணங்கள் பெரிதும் நடைபெற்று வந்துள்ளன என அறிகிறோம்.

அகநானூற்றில் 86 மற்றும் 136வது பாடல்கள் சங்ககாலச் சமுதாயத்தில் நிலவிய திருமண முறையினை கூறுகின்றன. இதனால் திருமணம் தமிழ் சமுதாயத்தில் பண்டு தொட்டு நிலவி வரும் ஒரு வழக்கம் ஆகும்.

பல சாதிப் பிரிவுகள் தோன்றிய பின்னும் தொன்று தொட்டு வரும் திருமணம் என்ற மங்கல நிகழ்வு எல்லாச் சமுகத்திலும் அவரவர் மரபிற்கு தகுந்தவாறு சீர் சிறப்புக்களில் சிற்சில வேறுபாடுகளுடன் நடைமுறையில் இருந்து வருகிறது.

நமது பெற்றோரில் சிலர் தங்கள் திருமண நாட்களை நினைவு கூர்ந்து நகைச் சுவையாகக் கூறவதைக் கேட்டிருப்போம்.

அவர்களது நகைச் சுவை உணர்வை வெளிப்படுத்திய ஒரு நிகழ்ச்சி இங்குகாண்போம். தன் மகனுக்கு பெண்பார்த்து திருமணம் செய்து பார்க்க வேண்டுமென்ற எண்ணத்தை தன் மகனிடம் கூறினார் தந்தை. மகனோ தான் பெண்ணைப் பார்க்கவேண்டுமென்று கூறினார். அப்போது தந்தை உங்கம்மாவை நான் பெண்பார்த்தா கலியாணம் செய்து கொண்டேன் என்று அவரது இளமை காலத்தை நினைவுக்கு கொண்டு வருவார். மணவறையில் உங்கம்மா பக்கத்தில் உட்கார்ந்திருந்த போது முகத்தைப் பார்க்கலாம் என்றால் 'அக்கினி' புகை மூட்டத்தில் தெரியவில்லை. ஓரக்கண்ணால் பார்க்கும்போதும் தலையைக்குனிந்து உட்கார்ந்திருந்தாள். இதை அம்மாவிடம் கூறி நான் சொல்வது சரிதானா என வினவி அவர் முகத்தைப் பார்ப்பார். அவர்களோ 'போங்கள்' இப்போது இதெல்லாம் என்று தலையைத் திருப்பிக் கொண்டு சொல்வார்கள். அந்தத் திருப்பலில் ஆயிரம் ஏடுகள் மிதந்து வரும். அதைக்கண்டு அவர் பூரித்தும் போவார். நமது பெற்றோரின் காலத்திலிருந்து மிகவும் வேறுபட்டகாலம் இது.

ஒரு ஆண் தனக்கு வரவேண்டிய மனைவி எவ்வாறு இருக்க வேண்டுமென்ற கற்பனை இருக்கும். அதேபோல் ஒரு பெண்ணுக்கும் தன் சிந்தனைகளையும், அறிவையும் வெளிப்படுத்த ஒத்துழைக்கும் ஆண்மகன் அமைய வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருப்பது இயல்பு.

மேலும் மழைத்துளி விழும் நிலத்து இயல்புக்கு ஏற்ப மாறி அந்த மண்ணின் தன்மைகளையும் தன்னகத்தே ஏற்றுக் கொண்டு சிறப்புச் செய்கிறமாதிரி ஒரு பெண் திருமணத்திற்குப்பின் பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்குச் சென்று அந்த இல்லத்தை இல்லக விளக்காய் பிரகாசிக்கச் செய்கிறாள். எனவே ஒரு பெண். தான் வாழப்போகும் வீட்டில் உள்ளவர்களது விருப்பு, குண நலன்களை அறிந்து கொள்வது அவசியமெனக் கருதப்படுகிறது.

இக்காலப் பெண்கள் பருவம் அடைந்து பல ஆண்டுகள் கல்வி அறிவு பெறுவதில் கடந்து விடுகிறது. நன்கு சிந்திக்கும் திறனும் பெற்றுவிடுகிறார்கள்.

இவையன்றியும் ஆண் பெண் இருவரும் கல்வி அறிவு, உலக அறிவு மிகுதியாய் பெற்றுள்ளனர். ஆகையால் அவர்களும் ஒருவரை ஒருவர் பார்த்து கருத்தறிந்து முடிவு செய்வதற்கு வாய்ப்பளிக்க வேண்டிய காலகட்டம் இது.

*கொடுப்பினன் குடைமையுங் குடிநிரல் உடைமையும்*
*வண்ணமுந் துணையும் பொரீஇ''.......* (குறிஞ்சிப்பாட்டு 30-31)

பொதுவாகவே தம் பெண்ணுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் வந்ததும் நம் பெண்ணை இன்ன இடத்தில் கொடுத்தால் பிற்கால வாழ்க்கை நன்கு இருக்குமா எனச் சிந்திப்பார்கள் தம் குடும்பத்துடன் மணமகன் குடும்பம் ஏற்றதாக உள்ளதா மணமகனின் பெற்றோரிடையே உள்ள குணங்களை ஒப்பிட்டும் பார்த்து பெண்ணைப் பெற்றவர்கள் ஒரு முடிவுக்கு வருவார்கள்.

பெண்கள் எப்போதும் தம் மகள் நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டு நல்ல வகையில் வாழவேண்டும் என்று பெரிதும் விரும்புவார்கள் என்பதற்குச் சான்றாக ஒரு புராண வரலாறு. இறைவன் இறைவி திருமணமும் இதற்கு விதி விலக்கில்லை என்பதை 'சைவர்கள்' பெரிதும் போற்றப்படும் கச்சியப்ப சிவாச்சாரியார் அவர்களின் 'கந்தபுராணத்திலிருந்து' அறியலாம்.

பழம்பெரும் தமிழறிஞர் கி.வா.ஜா அவர்கள் தமக்கே உரித்த நடையில் ''கந்தவேள் கதையமுதத்தில்'' பார்வதி தேவியின் தாய் மேனையின் மன இயல்பை விவரித்துள்ளதை காண்போம்.

'சிவபெருமான் ஏழுமுனிவர்களையும் அழைத்து ''நீங்கள் இமாசல அரசனிடம் சென்று அவனுடைய பெண்ணாகிய பார்வதியை மணம் பேசி வாருங்கள்'' என்று அனுப்பினான். இந்த ஏழு முனிவர்களும் இமாசல மன்னனிடம் வந்து ''சிவபெருமான் உன்னுடைய பெண்ணை மணம் பேசி வரும்படி எங்களை அனுப்பினான்'' என்று சொல்ல அவன் மிகவும் களிப்பை அடைந்தான். ''என்னுடைய பெண்ணாகிய உமா தேவியை எம்பெருமானுக்கு திருமணம் செய்து கொடுத்து, என்னையும் அடிமையாகக் கொடுப்பேன்'' என்று ஊக்கத்தோடு சொன்னான்.

அப்போது அருகில் நின்ற மேனை சற்றே அஞ்சினாள். மேனை தன்னுடைய கணவனைப் பார்த்து ''பிரமாவின் புதல்வனாகிய தக்கன் தன்னுடைய குழந்தையாகிய தாட்சாயணியைச் சிவபெருமானுக்கு திருமணம் செய்து கொடுக்க, அவர் தம் மாமனாராகிய தக்கன் தலையையே கொண்டார் என்று கூறுவார்கள். மாமனார் என்று பாராமல் அப்படிச் செய்த அவரை எண்ணினால் என்னுடைய மனம் மிகவும் அஞ்சுகின்றது. நம்முடைய குலமகளை அவருக்கு எதற்காக கொடுக்க வேண்டும் என்றாள் என்கிறது அப்பாடல்

*மறையவன் புதல்வன் தன்னோர் மடந்தையை மணத்தின் நல்க*
*அலைபுனற் சடிலத் தண்ணல் அவன் தலை கொண்டான் என்பர்;*
*நிலைமை யங்கதனை உன்னி நெஞ்சகம் அஞ்சும்; எங்கள்*
*குலமகள் தனைஅ வற்குக் கொடுத்திடல் எவனோ என்றாள்*

சிவபெருமானுடைய பெருமையை எண்ணாமல் தன்னுடைய மகளின் நன்மையை மாத்திரம் நினைத்து இவ்வாறு கேட்டாள் மேனை (2) இதன் மூலம் ஒரு தாயின் இயல்பினை நாம் காண்கிறோம்.

## திருமண வயது

குழந்தை மணத்தில் (பால்ய விவாகம்) பையனும் பெண்ணும் குழந்தைகளாக இருப்பதால் திருமணம் என்றால் என்ன என்பதே அறியாத பருவத்தில் இரு பெற்றோரும் தங்கள் குழந்தைகளுக்கு திருமணம் முடித்து வைப்பர்.

அணிந்து கொள்ள நல்ல ஆடைகள், கல்யாண ஊர்வலங்கள், நல்ல விருந்து இவற்றுடன் சேர்ந்து விளையாடுவதற்கு விசித்திரப் பெண் ஒருவள் கிடைத்தாள் என்பதைத் தவிர வேறு என்ன உள்ளது. இப்பால்ய விவாகத்தில்.

இளம் தம்பதிகள் நீண்டகாலம் சேர்ந்திருக்கப் பெற்றோர்கள் விடுவதில்லை. குழந்தைப் பருவப் பெண் தன் பெற்றோருடன் பூப்பு எய்தும் வரை வாழ்ந்து வருவாள். அதன் பின் கணவனுடன் சேர்த்து வைப்பார்கள்.

பெண்கள் பூப்படையும் வரை பெற்றோரோ அல்லது உறவினரோ பெண்ணின் திருமணத்தை நினைப்பது இல்லை. எனவே சிறுவயதில் திருமணம் (பால்யவிவாகம்) நம்மிடையே இல்லை.

சில காலங்களுக்கு முன்பெல்லாம் பெண்கள் சராசரியாக 16 வயதில் பூப்பு எய்தி வந்துள்ளனர். ஆனால் இப்போதெல்லாம் சத்துள்ள உணவு, ஆரோக்கிய வாழ்வு, சுற்றுச்சூழல் போன்ற சூழ்நிலைகளால் பெண்கள் சாதாரணமாக 12 வயதிலேயே பூப்பு எய்தி விடுகின்றனர்.

முழு உடல் வளர்ச்சி, மன வளர்ச்சி அடைந்த பின் திருமணம் செய்வது மருத்துவ, உளவியல் ரீதியாக நல்லது எனக் குறிப்பிட்டுள்ளனர். எனவே பெண்ணின் திருமணம் 21 வயதிலிருந்து மேற்கொள்வது நலம்.

இல்லறம் இனிமையாக நடைபெற வேண்டுமானால் கணவன் - மனைவி இருவரிடமும் பொறுமை, விவேகம், விட்டுக் கொடுக்கும் தன்மை, சகிப்புத்தன்மை அவசியம் என்பதை இருவருமே உணரவேண்டும். இல்லறம் நல்லறமாக அமைய இருவரிடமோ அல்லது இருவரில் ஒருவரிடமோ இவை இருக்க வேண்டும் இயற்கையாகவே பெண்ணிடம் இக்குணங்கள் சற்று கூடுதலாக அமைகிறது.

பெண்களி டம் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை உள்ளதை பொதுவாகக் காண்கிறோம். தன்னை விட மூத்தவருக்கு விட்டுக் கொடுத்து வாழ்வதற்கு ஒரு பெண்ணுக்கு எளிதாக இருக்கலாம். இதனாலும் உடல், மன இயல் ரீதியாக பார்க்கும் போதும் பெண்ணைக் காட்டிலும் ஆண் மகன் சில ஆண்டுகள் மூத்தவனாக உள்ளவர்களுக்கே திருமணம் செய்வது நல்லது. இந்த வழக்கத்தை நாமும் நடைமுறையில் கொண்டுள்ளோம்.

தாய் தந்தையருக்கு

திருமணம் சமுதாயத்தில் மேலாக மதிக்கப்படுகிறது. இது ஒரு மங்கல வழக்கு. பருவமடைந்த பெண்ணுக்கு பெற்றோர் அவளது திருமணம் பற்றி சிந்திப்பர். உரிய ஆண் மகனுக்கு திருமணம் செய்வது உலக இயல்பு.

'திருமணம் ஆயிரங்காலத்துப் பயிர் என்பது ஆன்றோர் வாக்கு. இல் வாழ்க்கை வாழ்நாள் முழுவதும் நிம்மதியும் அமைதியுடன் இருக்க வேண்டும். எனவே ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் மணம் பேசி முடிவு செய்வதில் மிக்க கவனமும் நிதானமும் தேவைப்படுகிறது. அவசர கோலத்தில் கல்யாணம் என்பது தவிர்க்கப்படவேண்டும்.

பிறந்த வீட்டிற்குத் தன் பெண்ணை மருமகளாக அனுப்பியோ அல்லது உடன் பிறந்தவர் மகளை தன் மகனுக்கு மனைவியாக்கியோ முறைப்பெண் முறை மாப்பிள்ளை என்ற மணவுறவு முறை ஒரு உரிமையாகவே கருதி வருகிறோம்.

சில பல காரணங்களால் முறைமாப்பிள்ளை உறவு அமையவில்லை யெனில் நெருங்கிய உறவில் உள்ள பெண்கள், அதன் பின்தான் தூரத்து உறவுப் பெண் பார்ப்பது என்ற வழக்கம் நடைமுறையில் இருந்து வருகிறது.

தாய் மாமன் மற்றும் நெருங்கிய உறவைப் பொருத்த வரை அவர்கள் குலம் நடையுடை பாவனை, வாழ்க்கை முறை, சமுதாயத்தில் அவர்களது நிலைப்பாடு எல்லாம் நன்கு தெரிந்துள்ளதால் பெண் எடுப்பதில் தயக்கம் ஏற்படுவல்லை.

தூரத்து உறவெனில் விழிப்புடன் இருந்து உற்றார், உறவினர் மற்றும் நண்பர்கள் மூலம் குலம், குடும்ப விவரம் நன்கு அறிந்து முடிவெடுக்க வேண்டியது அவசியமாகிறது.

ஆணும் பெண்ணும் ஒரே கூட்டத்தைச் (குலத்தை) சேர்ந்தவர்களானால் அவர்கள் சகோதரன், சகோதரி உறவு முறையாகிறது. ஆகையால் பெண்ணின் கூட்டத்தை (குலம்) தெரிந்து கொள்ளுவது அவசியமாகிறது.

இக்காலத்தில் பையன், பெண் இருவர் ஜாதகப் பொருத்தம் பார்த்து மணம் பேசவு

பரவலாக உள்ளது. ஜாதக பரிமாற்றத்திற்கென பல திருமண அமைப்புக்கள் உள்ளன. 'நவீன சுயம்வரம்' என்னும் நிகழ்ச்சிகள் பல இடங்களில் நடைபெறுவதையும் நாம் காண்கிறோம்.

கோவிலுக்குச் சென்று இறைவன் திருவருள் வேண்டி முடிவு செய்யவோரும் உண்டு. எவ்விதப் பொருத்தமும் பார்க்காமல் பெரியோரின் திருவாக்கின் மூலம் முடிவு செய்வதும் உண்டு. இக்காலத்தில் ஆண், பெண் இருபாலரும் சரி நிகர் சமமாக கல்வி அறிவு பெற்றுள்ளனர். உலகியல் நடைமுறைகளையும் உணர்ந்தும் அறிந்தும் உள்ளனர். ஒருவரை ஒருவர் பார்த்துப் பேசி மன இயல்புகளை அறிந்து கொள்வதை பலர் விரும்புகின்றனர். அவர்களது இல்லறம் நன்கு அமைய வேண்டு மென்பதால் பெற்றோரும் மறுப்பின்றி இதற்குச் சம்மதிக்கின்றனர்.

தங்கள் மகன், மகளுக்கு உரிய பருவத்தில் திருமணம் செய்து வைப்பது பெற்றோர்களின் இல்லறக்கடமையானதால் ஆய்ந்து, ஆராய்ந்து முடிவு செய்வது இரு பெற்றோர்களிடமும் விடப்படுகிறது.

## காதல் திருமணம்

காதல் திருமணங்கள் என்பது இன்று நேற்றையதன்று. தொன்று தொட்டு காலந்தோறும் இருந்து வந்துள்ளதென வரலாற்றால் அறிகிறோம்.

சங்க காலச் சமுதயத்தில் பருவமடைந்த பெண்கள் தினைப்புனம் காக்கச் செல்வதும், சுனையில் நீராடுவதும், மலர்கொய்து சூடி விளையாடுவதும், அச்சூழலில் எதிர்பாராது ஆடவனைச் சந்தித்து இருவரும காதல் வயப்படுவதும், தோழி, பாங்கன் துணையால் கூட்டம் நிகழ்வதும், தலைவி தன் நற்றாயிடம் தன் காதலை வெளிப்படுத்த அஞ்சுவதும், தோழி துணையிருந்து நற்றாயின் குறிப்பறிந்து தலைவியின் காதலையும், அவள் விரும்பும் ஆடவனைக் குறித்துக் கூறுவதும், சமுதாயத்தில் தங்கள் நிலைப்பாட்டினைக் கருதி மகள் மேல் சினங்கொள்வதும், பின் தங்கள் மகள் நல் வாழ்வினையும் கடமையையும் கருதி மகளின் விருப்பத்துக்கு இசைவு தந்து காதலன் காதலி என்பதிலிருந்து கணவன் மனைவியாக அறத்தொடுவாழ ஊரறிய திருமணம் செய்து வைத்த நிகழ்வுகளை சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்களிலிருந்து அறிகின்றோம்.

*.......................................சிறுதினைச்*
*செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி*
*அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகென* (நற்றிணை134: 3-5)

*அவிர்துகில் புரையும் அவ்வெள் ளருவித்*
*தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்*
*பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி*

*நளிபடு சிலம்பிற் பாயும் பாடிப்*
*பொன்னெறி மணியிற் சிறுபுறத் தாழ்ந்தவெம்*
*பின்னிருங் கூந்தல் பிழிவனத் துவரி*

குறிஞ்சிப்பாட்டு 55-60)

*சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி,*
*மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி*
*மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்*
*சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப*
*அலந்தனென் வாழி தோழி*

(நற்றிணை 149 : 1-5

*எந்தையும் யாயும் உணரக் காட்டி*
*ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்த பின்*
*மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப,*
*நன்றுபுரி, கொள்கையின் ஒன்றாகின்றோ-*
*முடங்கல் இறைய தூக்கணங் குரீஇ*
*நீடுஇரும் பெண்ணைத் தொடுத்த*
*கூடினும் மயங்கிய மையல் ஊரே!*

(குறுந்தொகை 374

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிய காத திருமணங்களைக் கண்டோம். இன்றைய தலைமுறை சமுதாய வாழ்க்கைக் வருவோம். உலகமயமாக்கல், சந்தைப் பொருளாதாரம், பொருளாதாரச் சீ திருத்தங்களின் விளைவால் அயல் நாட்டினரின் நாகரீகம், கவர்ச்சி ஆடை அணிகலன்கள், நுகர்வுப் பொருள் வரத்து நம் மக்களிடையே பெரிய மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது.

'ஆணுக்குப் பெண் சரி நிகர் சமம்' என்னும் வகையில் கல்வி கற்றல், ஆராய்ச்சித் துறை, பொதுத்துறை நிறுவனங்கள், தொழிலகங்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து தொழில் செய்து வருகின்றனர். பள்ளிக் குழந்தைகள், இளம்வயதினர் முதல் வாழ்க்கையின் விளிம்பிலுள்ள மூத்தோர்கள் ஈராக பலரும் அன்றாடம் பொது இடங்கள், பேருந்துகள். இரயில் பயணம், அலுவலகங்களில் ஒருவரையொருவர் பார்க்கின்றனர். உரையாடுகின்றனர் எந்தவித சலனமுமின்றி அவர்கள் விலகி விடுகின்றனர். ஆனால் குறிப்பாக ஒரு சில இளவயது ஆடவன், பருவ மங்கையின் சந்திப்பில் ஏதோ ஒரு வகை கவர்ச்சியேற்பட்டு அவர்கள் உள்ளம் ஒன்றுபட்டு பாசப் பிணைப்பால் மிளிர்கிறது. ஆண் பெண் பலரின் சந்திப்பில் இல்லாத ஒரு வித உள்ளக் கவர்ச்சியும் உணர்வும் ஒரு சிலரின் வாழ்க்கையில் மட்டும் ஏற்படுவது ஏன் என் வினாவிற்கு விடை காண வேண்டியுள்ளது. 'இது இயற்கையின் செயல்' - 'ஊழ்வினை (யில்) நம்பிக்கை நிலைத்தவர்களின் எண்ணம், கருத்துமெனக் கருதுகிறோம்.

அடுத்து இரு மனமும் இணைந்த இளைஞனும், மங்கையும் தங்கள் திருமணத்தை எண்ணுகின்றனர். தங்கள் நிலைப் பாட்டை தம் பெற்றோர்களிடம் வெளிப்படுத்த

சிலர் அஞ்சியும், சிலர் மனதில் உறுதி கொண்டு தெரியப்படுத்தவும் செய்கின்றனர். தங்கள் மகன்/மகளின் செயலைக் கேள்விப்பட்டதும், சமுதாயத்தில் தங்கள் நிலைப்பாடு மற்றும் மரபிற்கு ஏற்படும் தாக்கம் 'அவர்கள்' மனத்தை அலைபாயச் செய்யும். திருமணம் செய்து வைப்பது பெற்றோரின் கடமை என்பது அறிந்திருந்தும் இவ்வாறு அவசரப்பட்டு விட்டனரே என வருந்தி முதலில் மறுப்புத் தெரிவிப்பதும், பின்பு நிதானமாகச் சிந்தித்து தங்கள் மக்களை சீராட்டி வளர்த்து ஒரு நல்ல நிலைக்கு கொண்டு வந்துள்ளதையும், அவர்கள் நல்வாழ்வையும், திருமணம் செய்து வைப்பது தங்கள் கடமையெனக் கொண்டும் தங்கள் மகன்/மகள் காதலர்களாக வாழ்வதிலிருந்து சுற்றமும் நட்பும் சூழ ஊறறிந்து திருமணம் செய்து சமுதாயத்தில் கணவன் மனைவியாக அறத்தோடு வாழ வழி வகுத்துக் கொடுப்பது தங்கள் முதன்மைக் கடமையெனக் கருதி பலர் தங்கள் நிலைப்பாட்டுக்கு மாறுபட்டு திருமணம் செய்து வைப்பதை நாம் கண்டு வருகிறோம்.

காதற் திருமணங்களை வலியுறுத்துவதோ, கடிவதோ நமது நோக்கமன்று. பலர் வாழ்க்கையில் இல்லாத ஒன்று, ஒரு சில இளைஞன்/மங்கையிடம் பால் உணர்வால் உள்ளக்கிளர்ச்சியும், பாசமும் ஏற்படுவது அவர்களது குற்றமன்று - பருவத்தின் தடுமாற்றம் - இயற்கையின் செயல் - ஊழ்வினைப் பயன் இது, அங்கொன்றோ, இங்கொன்றோ நடைபெறுவது எனக் கருத வேண்டியுள்ளது.

சான்றோன் ஆக்கிய தந்தையும், பெற்றுவளர்த்த தாயும் தம் மக்களுக்கு திருமணம் செய்து வைப்பது கடமை, மறுக்க இயலாது எனவும், ஒவ்வொரு ஆணும்/பெண்ணும் தங்கள் நல்வாழ்வுக்காக பெற்றோர்கள் ஊரறிய திருமணம் செய்து வைத்து கணவன் மனைவியாக நல்ல அறத்தோடு வாழ வைப்பது பெற்றோரின் கடமையெனவும் கருத்தில் கொண்டும் வாழ்ந்தால் வாழ்க்கை இனியதாகவும் அமைதியாகவும் நிலைக்கும்.

## பெண்பார்த்தல்

பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டுக்கு முதலில் செல்லாமல் மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டுக்கு பெண் கேட்டு வரவேண்டும் என்ற பண்புடையவர்களாக உள்ளோம்

பத்துப்பேர் சென்று, பெண்ணைப் பார்த்து என்ன படித்திருக்கிறாய், பாடத் தெரியுமா, ஆடத் தெரியுமா எனக் கேட்டு தெரிந்தும் அவர்கள் அளிக்குப் சிற்றுண்டியை சாப்பிட்டுவிட்டு நாங்கள் சென்று கடிதம் எழுதுகிறோம் என்று கூறுப் பழக்கம் நம்மிடமில்லை.

இரு வீட்டாரும் மனப்பூர்வமாக திருமணத்திற்கு சம்மதம் அளிக்கும் வரை மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிலும், பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டிலும் கை நனைப்பதில்லை என்ற உயரிய பண்பினை மேற்கொண்டு வருகிறோம். காலங்கள் மாறலாம், சூழ்நிலைகள் மாறலாம் ஆனால் இப்பண்பாடு என்றும் மாறாமல் பார்த்துக

கொள்வது நம் தலைமுறையினர் தங்கள் தலையாய கடமை எனக் கருதவேண்டும். அவரவர்களுக்கு ஏற்புடைய வழிகளில் பொருத்தம் பார்த்து மனநிறைவடைந்து திருமணம் செய்து கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்த பின் ஒரு நல்ல நாளில் ஒரு நல்ல நேரத்தில் தங்கள் வீட்டிற்கு வருமாறு பெண் வீட்டார் அழைப்பார்கள். அவ்வழைப்பை மாப்பிள்ளை வீட்டார் மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டுள்ளதாகவும் உற்றார் உறவினரும் (சுமார் இவ்வளவு) பேர் வருவதாக தகவல் அனுப்புவர்.

பெண் வீட்டிற்குச் சென்று பெண் பார்த்தல் என்ற நிகழ்வு திருமண நிகழ்ச்சிகளில் அமையும் முதற்படியாக கருதப்படுகிறது. உறவினர்கள் உரிய மதிப்பினை தமக்கு அளிக்கவில்லை என்ற காரணத்தால் ஒருவர் கோபமும் வருத்தமும் கொள்வதும் உறவினர்களிடமிருந்து ஒதுங்கிச் செல்வது நடைமுறையில் இயல்பாக காண்கிறோம். எனவே திருமணம் தொடக்கநிலையிருந்து முடியும் வரை எல்லா நிகழ்ச்சிகளிலும் உரிமையுடன் பங்கேற்று நடத்திக் கொடுப்பவர்களில் சிறப்பிடம் பெறுபவர்கள் தாய்மாமன், சகோதரர் குடும்பங்கள், சகோதரி குடும்பங்கள், சம்பந்தி குடும்பங்கள் இதனை எப்போதும் கவனத்தில் கொண்டு அவர்களுக்கு உரிய மதிப்பு அளிப்பதில் எக்குறையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

பண்டு தமிழ்ச் சமுதாயத்தில் தங்களைச் சார்ந்த ‘கைத்தடி யூன்றிய’ வயதில் மூத்த சான்றோர்களுடன் மணம் பேச வந்த தலைவன் வீட்டாரை, தலைவி வீட்டாரும் சுற்றத்தாரும், சான்றோரும் ‘நன்று நன்று’ என முகமலர்ந்து முகமன் கூறுவதும் என் மகளின் மணம் பேச நீங்கள் வந்த நாளானதால் ‘இந்நாள்’ பெருமையுடையதாகிறது என இரட்டிப்பு மகிழ்ச்சியில் வரவேற்பதாக உரைக்கிறது குறுந்தொகைப் பாடல்,

*தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதவலர்*
*‘நன்று நன்று’, என்னும் மாக்க ளோடு*
*‘இன்று பெரிது’, என்னும், ஆங்கணது அவையே!* (குறு 146: 3-

இம்மரபினுக்கு ஒப்ப நன்நாளில் பந்துக்கள், சில நண்பர்களுடன் பெண் வீட்டிற்குச் செல்வர். பெண்வீட்டார் முன் வாயிலில் இன்முகத்துடன் முகமன் கூறி வீட்டிற்கு அழைத்துச் சென்று இருக்கை அளித்து தண்ணீர் கொடுப்பர் (கொங்கு சமுதாயத்தின் நாகரீகச் செயல்களில் சிறப்பு அங்கமாகக் கொள்வதிலொன்று வீட்டிற்கு வந்தவர்களை வரவேற்று தண்ணீர் கொடுத்து அருந்தச் செய்வதும் விடைபெறும் போது அவர்களுக்கு வெற்றிலை பாக்கு கொடுப்பதும்) வாசல் வரை வந்து வழியனுப்புவது மரபாகும்.

மாப்பிள்ளை வீடடார் கொண்டுவந்திருந்த மங்கலப் பொருள்களான குங்குமம், மஞ்சள், பூ, பழம், வெற்றிலை, பாக்கு, இனிப்பு வகைகள் தட்டில் வைத்து முன் வைப்பார்கள்.

வலப்பக்கத்தில் மாப்பிள்ளை வீட்டாரும், இடப்பக்கத்தில் பெண் வீட்டாரும் அமர்ந்து கொள்வார்கள். ஊர் நாட்டாண்மைக்காரர், பட்டக்காரர்,

அருமைக்காரர்களுக்கு உரிய மதிப்பளித்து அவர்களையும் அழைத்துக்கொள்வார்கள்.

பெண் வீட்டுப் பெரியவர் முதலில் பேச்சைத் தொடங்குவார். உங்களை மகிழ்விடன் வரவேற்கிறோம். நீங்கள் வந்துள்ளதன் கருத்தினை அறிந்து கொள்ள ஆவலாய் இருக்கிறோம் எனக் கேட்பார்.

மாப்பிள்ளை வீட்டுப் பெரியவர் உங்கள் பெண்ணை எங்கள் மகனுக்கு மணம் பேசி முடித்து நமது உறவை மேலும் வலுப்படுத்திக் கொள்ள விரும்புகிறோம் என்பார்.

பெண்ணின் தந்தை மகிழ்ச்சி. பெண்ணைப் பெற்றவளை ஒரு வார்த்தை கேட்கலாம் எனக் கூறி தனது துணைவியைப் பார்த்து 'ஏன் அம்மா' நமது மகளை மணம் பேச வந்துள்ளனர். உனது மனதில் உள்ளதைச் சொல்லும் என்பார். அவர்களும் ஆழ்ந்து சிந்திப்பதுபோல் முகத்தில் ஒரு தோற்றத்தை ஏற்படுத்தி பெரியவர்கள் நீங்கள் ஒரு 'நல்ல செய்தியைச்' சொல்லுங்கள் என்பார். பெண்ணின் தந்தை இந்தச் சம்மதத்தில் எங்களுக்கு முழு மனநிறைவு என்று மகிழ்வுடன் தெரிவிப்பார்.

நம் குலப் பெண்களின் மேற்கண்ட செயல்களைகூர்ந்து நோக்கில்:-

இக்காலத்தில் ஆண், பெண் இருபாலருக்கும் சமுதாயத்தில் சமஉரிமை வேண்டுமென்று கோரி வருகின்றனர். தொன்று தொட்டே நம் குடும்பவுலகில் மனைவிக்கு உரிய வாய்ப்பளித்து கலந்து பேசி முடிவுகள் எடுத்து வருகிறோம். மனைவி - இல்லத்தரசியாயினும் குடும்பத்தலைவரான தன் கணவர்தான் முடிவினைத் தெரிவிக்க வேண்டுமென்ற உயரிய பண்பினைக் கொண்டுள்ளனர் என்பதை அறிகிறோம்.

மேலும் பெரியவர்கள் பார்த்து 'நல்ல' செய்தியைக் கூறுங்கள் என்றார். 'நல்ல' என்ற மங்கலச் சொல்லை அடைமொழியாக சேர்த்துக் கூறியதால் தன்னுடைய சம்மதத்தை எவ்வளவு இங்கிதமாக வெளிப்படுத்தியுள்ளர் என்பதையும் அறிகிறோம்.

இவ்வாறு தங்கள் உரிமை, கணவர் மற்றும் பெரியோர்களுக்கு உரிய மதிப்பு மரியாதை அளித்தல், செயல், எண்ணங்களை திறம்பட இங்கிதமாக வெளிப்படுத்துவதில் தலைசிறந்தவர்கள் நம் குலப்பெண்கள் என்பதற்கு இவையல்லவா சான்றுகள் என்று கூறுவதில் பெருமைப் படுகிறோம்.

சங்கால வரலாற்றை நோக்கும் போதும் பெண்கள் அறிவு, ஆளுமை, வீரச் செயல்களில் சிறந்து விளங்கினர் என்பதையும் அறிவோம். சில சந்தர்ப்ப சூழ்நிலைகளில் ஆண்களையும் விஞ்சும் அளவு சமயோசித புத்தி கூர்மை பெற்றிருந்தனர் என்பதை 'கலித்தொகை' பாடல்களிலிருந்து அறிகிறோம். அதற்கு எடுத்துக்காட்டாக இங்கு ஒரு காட்சி சுட்டப்படுகிறது.

இயற்கைச் சூழல் நிறைந்த அழகிய கிராமம், மகிழ்ச்சி பொங்க இல்லங்களில் வாழ்ந்து வந்தனர். பூப்பெய்திய பெண்களை மணங்காணும் வரை கண்ணை இமை

காப்பது போல காத்து வந்த காலம் அது.

நீர் நிலைகளில் தண்ணீர் எடுத்தல், வயல் தோட்டங்களில் வேலை செய்யு காலங்கள் தவிர தங்கள் இல்லங்களிலிருந்து பெண்கள் வெளியே வர அனுமதிக்க மாட்டார்கள்.

அச்சூழ்நிலையிலும் இளைஞன் ஒருவன் ஒரு கன்னிப்பெண்ணை எதிர்பாரா சந்திக்க நேர்ந்தது. காதல் பிறந்தது கருத்தொருமித்த காதலர்கள் தனித்த நேரங்களி சோலையிலும் நீர் நிலைகளிலும் சந்தித்து அளவளாவி காதலை வளர்த்து வந்தன

ஆண்மகனுக்கோ தன் காதலியை அவளது வீட்டில் சந்திக்க வேண்டுமென் உந்துதல் ஏற்பட்டது. ஒரு நாள் தன் காதலியின் வீட்டிற்குச் சென்றான். எவ்வா அழைப்பது என்று சிந்தித்தான். சிறிது தைரியத்தை வரவழைத்து 'இல்லத்தி உள்ளவர்களே தாகம் தீர பருகத் தண்ணீர் வேண்டுமென' உரக்கக் கூவினான்.

வீட்டிலுள்ள அன்னை தம் மகளைப் பார்த்து உண்ணு நீரை பொற்சொம்பில் ஊற் வந்தவரை நீர் பருகச் செய்து வருமாறு பணித்தாள். உண்ணும் நீர்ச் சொம்புடன் மங்கை வெளியே வந்தாள். வந்து நிற்பது தன் காதலன் எனக் கண்டதும் சற்று கலக்கமு ஆச்சரியமும் அடைந்தாள். அப்போது காதலன் என்னை நோக்கினான். யா கண்டதும், நோக்கித் தலைகுனிந்தாள்,. அது அவள் வளர்க்கும் அன்பினு வளர்கின்ற நீராகும் என நினைத்தான்.

*நோக்கினாள நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்*
*யாப்பினுள் அட்டிய நீர்* (குறள் 1093

என்ற திருக்குறள் அடிகளுக்கு இலக்கணமாக அமைந்தது. அவர்கள் சந்திப்பு.

காதலன் தன் கையைப்பற்றுவான் எனத் தன்னையும் அறியாது மங்கை நீருள் பொற் சொம்பை நீட்டினாள். காதலனோ பொற்சொம்பைவிட்டு தன் காதலியி வளையணிந்த முன் கரத்தைப் பற்றினான். சற்றும் இதை எதிர்பாராத அம் மங்கை ஆற்றில் புதுப்புனல் பெருக்கெடுத்து பாய்கின்ற காலத்தில் அலைகள் மோதுகின் இடிபடும் கரையில் நிற்கின்ற வாழை மரம் போல நடுக்குற்று. 'தாயே, இவனொருவ செய்த தோர் செயலைப் பாராய்' என அச்சத்தால் அலரிவிட்டாள். மக குரலைக்கேட்ட தாய் பதறி விரைந்து வெளியே வந்தாள். ஆடவன் ஒருவ இருப்பதைக் கண்டாள். ஆடவன் ஏது நடக்குமோ என்ற அச்சத்துடன் இருந்தான்.

நிலைமையை உணர்ந்த அம் மங்கையோ தன் தாயிடம் வேறொன்றும் இல்லை 'வேகமாக நீருண்டு விக்கி வருந்தினன்' என்று உண்மையை மறைத்துக் கூறினா அந்தத் தாய் ஆடவனைப் பார்த்து நீரை மெதுவாக உண்பதற்கென்ன என அன்புட கடிந்துகொண்டு ஆடவன் குனிந்து குனிந்து விக்கும் போது அத்தாய் வலது புறமா நின்று தொண்டை முதுகுப் புறங்களில் மெதுவாகத் தட்வி விடும் போது 'த காதலனாகிய அக்கள்வன் கடைக்கண்ணால் தன்னைக் கொல்வான்போ

நோக்கினான்' என்று தோழியிடம் கூறினாள் என்கிறது பாடல்.

காதலன் தன் கையை பற்றுவான் என்று சற்றும் எதிர்பாராத நிலையில் தன் வளைக்கரத்தை பற்றியதால் அம்மங்கை தாயே என்று குரலிட்டு விட்டாள். தன் தாயைக் கண்டதும் ஒரு நொடிப் பொழுதில் உண்மைக்கு மாறாக 'தண்ணீர் குடிக்கும் போது விக்கிற்று' என அம்மங்கை தலைவனைக் காட்டிக் கொடுக்காமல் தன் தாயிடம் கூறிய சமயோசித புத்தி கூர்மையை என்னே என்று வியப்பது எனக் கூறும் காட்சியை நம் மனக்கண் முன் நிறுத்தும் கலித்தொகை பாடல்

*........................மேலோர் நாள்*
*அன்னையும் யானும் இருந்தோமா இல்லிரே*
*உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற் கன்னை*
*அடர் பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்*
*உண்ணுநீ ரூட்டிவா என்றா ளென யானுந்*
*தன்னை யறியாது சென்றேன் மற் றென்னை*
*வளைமுன்கை பற்றி நலியந் தெரு மந்திட்*
*டன்னா யிவனொருவன் செய்தது காணெண்றோனா*
*அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்*
*உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையுந்*
*தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்*
*கடைக்கண்ணாற் கொல்வான்போல் நோக்கி நகை கூட்டஞ்*
*செய்தானக் கள்வன் மகன்* (கலித்தொகை 51: 4-16)

சாதுரியமாக பதில் சொல்லும் பெண்கள் வாழ்ந்து வந்திருந்த காலத்திலும் நாட்டுப்புற வழக்கில் சொல்லும். 'எங்க அப்பன் குதிருக்குள் இல்லை' என்று மறந்து உண்மை தோன்றக் கூறும் பேதைப் பெண்களும் இல்லாமல் இருந்ததில்லை. எனக் காட்டும் நற்றிணைப் பாடல்:

மலைச்சாரல் குறிஞ்சி நிலத்தில் இது நிகழ்ந்தது. தினைப் புனத்தில் விளைந்துள்ள கதிர்களைத் தின்ன வரும் கிளி, குருவிகளை விரட்ட தினைப் புனத்திற்கு பெண்கள் செல்வது வழக்கமாகக் கொண்டிருந்தனர். தமது மகளையும் தினைப் புனத்திற்கு அனுப்பிக் கொண்டு இருந்தாள் ஒரு தாய்.

தினைப் புனத்திற்கு சென்று வரும் அப்பெண் எதிர்பாராமல் ஒரு ஆடவனைச் சந்தித்தாள். அந்த ஆடவனும் அவளை விரும்பினான். சந்திப்பு தொடர்ந்தது. மணமிக்க மலர்கள் சூழ்ந்திருந்த சோலைகளிலும் நீர் நிறைந்த நீரோடைகளிலும் நீராடி மகிழ்ந்து விளையாடி இன்புற்றிருந்தனர்.

இச்சூழ்நிலையில், ஒரு நாள் தினைப் புனத்திற்கு சென்றிருந்தாள். தாய், தம் மகளை அங்கு காணவில்லை. மாலையில் வீடு திரும்பியதும மகளைப் பார்த்து சிவந்த வாயையுடைய பச்சைக் கிளிகள் தினைக் கதிரை கொய்து கொண்டு போகும் போது

அதனைக் காத்து நில்லாமல் எவ்விடத்திற்குச் சென்றிருந்தாய் என வினவினாள் தாய். அச்சமுற்ற அப்பெண்ணோ, பெரிய மலை நாடானை காதாலே கேட்டு அறிந்ததும் இல்லை, கண்ணாலே கண்டதும் இல்லை, மலர்ந்த பூக்களைப் பறித்து அவனோடு சுனை நீரில் பாய்ந்து ஆடியதும் செய்திலேன் என பொய்யுரையாது, நினைவில்லாமல் உண்மையை உரைத்துவிட்டாள்.

'தினைக் கொல்லையைக் காவாது எங்கு சென்றாய்' என்று கடிந்து கேட்ட அன்னைக்கு, அதற்குத் தக்கவாறு மறைத்துக் கூறாமல் யான் 'மலை நாட்டானைக் கண்டதுமிலேன், சுனையாடியுமிலேன்' என்று மறந்து உண்மை தோன்றக் கூறிய பேதைப் பெண்ணின் உரையாடலைப் புலவர் பெருந்தகை 'கொள்ளம்பக்கனார்' நற்றிணைப் பாடலில் விவரித்துள்ள தகைமையை வியந்து படித்து நாமும் வியப்புறுவோமாக.

*'யாங்கா குவமோ அணிநுதற் குறுமகள்*
*தேம்படு சாரல் சிறுதினைப் பெருங்குரல்*
*செவ்வாய்ப் பைங்கிளி கவர நீமற்று*
*எவ்வாய்ச் சென்றனை அவணெனக் கூறி*
*அன்னை ஆனாள் கழற முன் நின்று*
*அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை*
*அறியலும் அறியேன் காண்டலும் இலனே*
*வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து*
*சுனைபாய்ந் தாடிற்றும் இலனென நினைவிலை*
*பொய்யல் அந்தோ வாய்த்தனை அது கேட்டுத்*
*தலையிறைஞ் சினளே அன்னை*
*செலவொழிந் தனையால் அளியை நீ புனத்தே.'*

(நற்றிணை; 147.)

திருமணத்தை உறுதிசெய்தபின் இரு வீட்டாரும் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொண்டு திருமணநாள், உப்பு வாங்குதல், பட்டு எடுத்தல் திருமாங்கல்யம் செய்தல் போன்ற நிகழ்வுகளை முடிவு செய்து நாட்களைக் குறித்துக் கொள்வார்கள்.

இல்லறத்தின் உயர்ந்த அறம் விருந்தோம்புதல். விருந்தினர்களை உபசரிப்பதிலும் விருந்து அளிப்பதிலும் நம் குலப்பெண்கள் சளைத்தவர்களல்ல என்று காட்டும் விதத்தில் திருமண ஏற்பாடுகள் குறித்து கருத்துப் பரிமாற்றம் முடிந்ததும் சுவையான விருந்து அளிப்பார்கள். *இல்லத்துக்கு வரும் விருந்தினர்க்கு இல்லக் கிழத்தியே அன்னம் படைப்பது மரபு* (3). இம்மரபினை நம் இல்லங்களில் பின்பற்றி வருகிறோம் என குறிப்பிடுவதில் பெருமைப்படுகிறோம்.

ஒரு நல்ல நாளில் தங்கள் வீட்டிற்கு வருமாறு பெண்வீட்டாருக்கு மாப்பிள்ளை வீட்டார் அழைப்புவிடுத்துபின் எங்களுக்கு விடைகொடுங்கள் நாங்கள் போய் வருகிறோம் என்பர் 'போய் வருகிறோம்' என்ற மங்கலச் சொல் உங்கள் வீட்டி

நிகழவிருக்கும் நல்ல நிகழ்ச்சிகளுக்கெல்லாம் மீண்டும் மீண்டும் வருவோம் என்பதை உணர்த்துகிறது. இவ்வாறாக பெண்பார்க்கும் நிகழ்வு நடைபெறுகிறது.

## உப்பு வாங்குதல், மாங்கல்யம் செய்தல், பட்டு எடுத்தல்

மாப்பிள்ளை வீட்டார், பெண் வீட்டார் இருவரும் தங்கள் உற்றார் உறவினருடன் குறிப்பாக தாய் மாமன்மார்கள், சகோதர சகோதரி குடும்பங்கள் சம்பந்தி குடும்பங்களுடன் கடை வீதிக்குச் செல்வார்கள்.

முதல் நிகழ்வாக நல்ல நாளில் நல்ல நேரத்தில் உப்பு வாங்கிக் கொள்வர். தேவையான பொருள்கள் - மூங்கிலில் பின்னப்பட்ட இரண்டு சிறிய கூடைகள், வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய், விபூதி, சந்தனம், குங்குமம், ஊதுபத்தி, கற்பூரம், இனிப்புச் சுவையுள்ள மிட்டாய் வகைகள்.

கோயிலுக்கு (சிறப்பாக அம்மன் கோயில்) சென்று இறைவன்/இறைவி திருவடிகளில் மங்கலப் பொருட்களுடன் இரு கூடைகளையும் வைத்து தீப ஆராதனை செய்தபின் பெற்றுக்கொள்வர். மாப்பிள்ளை வீட்டார் தங்கள் கூடையை பெண் வீட்டாருக்கும் பெண்வீட்டார் தங்கள் கூடையை மாப்பிள்ளை வீட்டாருக்கும் கொடுத்து மாற்றிக் கொள்வர். பெண்ணின் பெற்றோரும் பையனின் பெற்றோரும் ஒருவருக்கு மற்றவர் சந்தனம் பூசி திலகமிட்டுக் கொள்வர். இருவீட்டுப் பெண்களும் ஒருவருக்கொருவர் திலகமிட்டு தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்திக் கொள்வார்கள்.

உணவு சுவையாக இருக்க உப்பு இன்றியமையாதது அதுவும் அளவோடு இருத்தல் வேண்டும். அதுபோல இரு வீட்டார் உறவும் சுவையாக இருக்கும் என்னும் கருத்தில் உப்பு மாற்றிக் கொள்ளும் பழக்கம் ஏற்பட்டிருக்கும் என கருதத் தோன்றுகிறது.

அடுத்ததாக பூசைக்குரிய பொருள்களுடன் பொற்கொல்லரிடம் சென்று திருமாங்கல்யத்திற்கு தேவையான பொன்கொடுத்து திருமாங்கல்யம் செய்து கொடுக்குமாறு கேட்டுக் கொள்வர். முகூர்த்தத்தின் போது பெண் அணிந்து கொள்ளும் பட்டுப் புடவையும் எடுத்துக் கொள்ளப்படும்.

திருமாங்கல்யம், முகூர்த்தப்பட்டுப் புடவை மாப்பிள்ளை வீட்டாரைச்சார்ந்தது என்பர். நிகழ்ச்சிக்கு வந்தவர்கள் எல்லோருக்கும் மாப்பிள்ளை வீட்டார் உணவு/சிற்றுண்டி அளித்து மகிழ்வுடன் வீட்டிற்குத் திரும்பி வருவார்கள்.

## முகூர்த்தக்கால் நடுதல்

முகூர்த்தக்கால் நடுதல் திருமணத்தின் முதல் நிகழ்ச்சி. திருமண நாளுக்கு முதல் நாள் அல்லது வேறு நல்ல நாளில் நல்ல நேரத்தில் முகூர்த்தக்கால் நடப்படுகிறது. வீட்டின் முன்புறம் உள்ள நிலப்பரப்பிற்கு ஏற்றவாறு பந்தல் அமைக்கப்படுவதால் அதற்குத் தேவையான 'கால்கள்' இரட்டைப்படையில் இருக்குமாறும், முகூர்த்தக்கால் ஈசானிய மூலையில் (வடகிழக்குப் பகுதி) அமையுமாறும் பார்த்துக் கொள்ளப்படுகிறது.

முகூர்த்தக்காலுக்கு சுமார் ஒரு அடி அளவிற்கு காவி, வெள்ளை வர்ணம் மாறி மாறி பூசப்படுகிறது. புதிய வெள்ளைத்துணியை மஞ்சள் நீரில் நனைத்து அதில் நவதானியம், நெல், சாமை, தினை, துவரை, பயிறு, கடலை, எள்ளு, உளுந்து, கொள்ளு காணிக்கை ரூ 1-25 வைத்து சிறிய முடியிட்டு அதனுடன் ஆல், அறுகு, மூங்கில் கிளைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

மஞ்சள் தூளில் சிறிய விநாயகர் செய்து சிறிய இலையின்மீது வைத்து மலர்தூவி தூப, தீப ஆராதனையுடன் வழிபாடு செய்யப்படுகிறது. அப்போது

*திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் - செஞ்சொற்*
*பெருவாக்கும் பீடும் பெருக்கும் உருவாக்கும்*
*ஆதலால் வானோரும் ஆனைமுகத்தானைக்*
*காதலால் கூப்புவர் தம்கை*

**(கபிலர்)**

பாடலைப்பாடி வழிபாடு செய்தபின் ஆல், அறுகு, மூங்கில் கிளைகளை மஞ்சள் துணியுடன் சேர்த்து பங்காளிகள் (தாயாதிகள்) முகூர்த்தக்காலில் கட்டுவார்கள் அப்போது ஆல்போல் தளைத்து அறுகுபோல் வேரூன்றி மூங்கில்போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருக்க வேண்டும் என்று சொல்லி எல்லோரும் இறைவனை வேண்டிக் கொள்வார்கள்.

மணவிழா ஒரு மங்கல விழாவானதால் பந்தல் அமைத்து வாழை, கமுகு நிலைகள் - கரும்புத் தழைகள் - தேங்காய் குலைகள் - மாங்காய் குலைகள் - கூந்தற் பனைகள் மாலைத் தொடர்கள் இவைகளெல்லாம் கட்டி பந்தல் அலங்கரிக்கப்படுகிறது.

நவீனகால செயற்கை இழை பூக்கள், சரிகைகள் மற்றும் மின் விளக்கு அலங்காரம் அவரவர் மனப் பக்குவதத்திற்கேற்ப கண்கவரும் வண்ணம் அலங்காரம் செய்து கொள்ளப்படுகிறது.

நம் குடும்பங்களில் நடைபெறும் எல்லா மங்கல நிகழ்வுகளிலும், சடங்குகளிலும் பந்தல் அமைத்தல், திருமண சீர்களில் ஊர் குடிமகன்களுக்கு (சலவைத் தொழிலாளர் முடிதிருத்துவோர்) உரிய உரிமை அளித்து அவர்கள் தங்கள் கடமையைச் செய்ய வாய்ப்பளித்து கவுரவிக்கப்படுகிறார்கள்.

## மணமகன்/மணப்பெண் மங்கல நீராட்டு

மணமகன்/மணப்பெண் வீட்டார் அவரவர் வீட்டில் உற்றார், உறவினருடன் மங்கல நீராட்டு செய்து கொள்கிறார்கள். இந்த நிகழ்வின் முழு உரிமை தாய் மாமனை சேர்ந்தது. வீட்டிலிருந்து மேள தாளத்துடன் ஊர்க்குடிமகன் (சலவைத் தொழிலாளர் தீப்பந்தம் பிடித்து முன்செல்ல தாய்மாமன் - அத்தையுடன் நீர் எடுக்க மூன்று குடங்களுடன் ஒரு தட்டில் தேங்காய், பழம் - பூசைக்குரிய பொருள்களுடன் சுமங்கலி பெண்கள், உறவினர் புடைசூழ நீர்நிலைக்குச் சென்று குடங்களில் நீர் நிரப்பி

அக்குடங்களுக்கு விபூதி, சந்தனம், குங்குமம் பொட்டிட்டு, மாலையிட்டு வெள்ளைத் துணியின்மேல் வைத்து இறைவழிபாடு செய்தபின் வீட்டிற்கு திரும்பி வருவார்கள்.

மணமகன்/மணப்பெண் பந்தலின் கீழ் ஈசான்யமூலையில் அமரச் செய்து தாங்கள் கொண்டு வந்திருந்த மங்கலநீரால் நீராட்டி விடுவர். மாமன், அத்தை மற்றும் உறவுப் பெண்கள் நீரில் மஞ்சளைக் கலக்கி அந்நீரை மணமகன்/மணப்பெண் மேல் ஊற்றி சிறிது நேரம் மகிழ்ந்து விளையாடுவார்கள்.

தாய்மாமன் புத்தாடையுடன் பொற்காசு/பொன் ஆபரணம்/பணமுடிப்பு முறையாக அளிப்பார். தாய்மாமன் தன் சகோதரிக்குச் செய்யும் சீர் சிறப்புக்களை வைத்தே ஒரு பெண்ணின் பெருமையும் சிறப்பும் சமுதாயத்தில் பெரிதாகக் கருதப்படுகிறது. இவ்வகையில் தாய் மாமன் வாழ்வியல் சடங்குகள் அனைத்திலும் கலந்து கொண்டு தனது சகோதரிக்க பெருமையையும், சிறப்பினையும் அளிக்கிறார்.

## நடு வீட்டுச்சாமி வழிபாடு

முதாதையர்களை (பித்ருக்கள்) வழிபடுதல், பங்காளிகள் (தாயாதிகள்) முன்னின்று நடத்தி வைப்பர். பெற்றோர் ஒவ்வொருவரும் தம் மக்கள் நன்மக்களாகவும், உலகியல் நன்மைகள் பலவும் பெற்று வாழ்வதற்கு தங்கள் உழைப்பை நல்கி வருகின்றனர்.



அவ்வகையில் நம் மூதாதையர் களின் பங்களிப்பால் உயர்ந்துள்ள நாம் அவர்களுக்கு குறிப்பாக இம் மங்கல நாட்களில் நமது நல்லெண்ணத்தையும், அன்பையும் வெளிப்படுத்த கடமை பட்டுள்ளோம். வழிபாட்டின் மூலம் வெளிப்படுத்தும் நல்லெண்ணம், அன்புடன் படைக்கப்படும் படையலை மானசீகமாக ஏற்றுக்கொண்டு அவர்கள் நமக்கு நல்லாசி வழங்குகிறார்கள் என்ற நம்பிக்கை வலுவாக உள்ளது. அந்த வீட்டாரின் நல்வாழ்விற்கு அந்த வீட்டாரின் மூதாதையர்களின் ஆசியே மையம் என்னும் நம்பிக்கையில் செய்து வருவதுதான் நடுவீட்டுச்சாமி வழிபாடு என்பர்.

வீட்டின் வடக்கு அல்லது கிழக்கு முகமாக உள்ள சுவரின் நடுப்பகுதியில் 'படத்தில்' காட்டியுள்ளவாறு மூன்று விரல்களில் மஞ்சள் தோய்த்து வரைந்து, அதன் மேல் சந்தனம், குங்குமப் பொட்டுவைத்துக் கொள்ளவேண்டும். தரையை சுத்தமாக மெழுகி, கோலமிட்டு முக்காலி மீது திருமணப்பட்டு, திருமாங்கல்யம் வைத்து அதன் இரு பக்கத்திலும் சிறிய வாழையிலையின் மீது திருவிளக்கினை (ஐந்துமுக குத்து விளக்கு) வைத்து அதற்கு விபூதி, சந்தனம், குங்குமப் பொட்டிட்டு, மேல், இடை, கால்பகுதிகளில் மலரால் அலங்கரித்துக் கொள்ள வேண்டும்.

மஞ்சள்தூளில் விநாயகர் செய்து வாழை இலையின் மீது வைத்து அதன் முன்புறம் மூன்று தலை வாழை இலைகளில் படையலைப் படைத்து வைக்கவேண்டும். அழகு பொலிய, இன்பம் பொங்க அம்மையப்பராக விளங்கும் முழுமுதல்வன் பேரொளிப் பிளம்பாய் இத்திருவிளக்கின்கண் எழுந்தருள வேண்டி

*இல்லக விளக்கது இருள் கெடுப்பது*
*சொல்லக விளக்கது சோதி யுள்ளது*
*பல்லக விளக்கது பலரும் காண்பது*
*நல்லக விளக்கது நமச்சி வாயவே*

(திருநாவுக்கரசர் தேவாரம் - நமச்சிவாய பதிகம்)

பாடலைப்பாடி மங்கள தீபத்தை ஏற்றி ஒரு பூ உச்சியிலும் ஒரு பூ திருவடியிலும் வைக்க வேண்டும்.

மணமகன்/மணமகள் பெற்றோர், உற்றார் உறவினருடன் பங்காளிகள் (தாயாதிகள்) முன்னின்று இறைவழிபாடு செய்வார்கள்.

இறைவழிபாட்டில் விநாயகர் துதி

*வானுலகும் மண்ணுலகும் வாழ மறை வாழ*
*பான்மை தருசெய்ய தமிழ் பார்மிசை விளங்க*
*ஞானமத ஐந்துகர மூன்று விழி நால்வாய்*
*ஆனைமுகனைப் பரவி அஞ்சலி செய்கிற்பாம்* (பெரியபுராணம்)

பன்னிரு திருமுறைகளில் எட்டாம் திருமுறை சைவக்குரவர்கள் நால்வரில் ஒருவரான மாணிக்க வாசகர் அருளிச் செய்த 'திருவாசகம்'. அதன முதல் பாடல் 'சிவபுராணம்' அப்பாடலை சொல்லுதல் நலம் தரும். இசையோடு பாடினால் மிகச்சிறப்பாக அமையும்.

நம்முடைய மூதாதையர்கள் நம்முடன் கூடி இருக்கிறார்கள் என்று எண்ணி மனம் உவந்து

*அறிவார் அமரர் தலைவனை நாடிச்*
*செறிவார் பெறுவர் சிலர் தத்துவத்தை*
*நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்*
*பெரியாருடன் கூடல் பேரின்பமே.* (திருமந்திரம்: 545)

எனச் சொல்லி தீபாராதனை செய்ய வேண்டும். மாப்பிள்ளை/மணப்பெண் பெரியோர்களை வணங்கி அவர்கள் நல்லாசி பெறுவார்கள்.

மூன்று இலைகளிலும் உள்ள படையலில் சிறிது, சிறிது எடுத்து காக்கை வடிவில் நமது முன்னோர்கள் வந்து படையலை ஏற்றுக் கொள்கிறார்கள் என்ற நம்பிக்கையில் காகத்திற்கு வைத்தபின் ஒரு இலையிலுள்ள உணவை மாப்பிள்ளை/மணப்பெண்ணுக்கும் மற்ற இரண்டும் தாய் தந்தையருக்கும்

எடுத்துக்கொள்வார்கள். வந்திருந்த அனைவருக்கும் விருந்து அளிப்பார்கள்.

திருவிளக்கு - பெண்கள் ஓர் ஒப்பீடு

குடும்பப் பெண்ணிற்கு அமைய வேண்டிய அன்பு, அறிவு, உறுதி, நிதானம், பொறுமை ஆகிய ஐந்து குணங்களையும் விளக்கின் ஐந்து முகங்கள் நினைவூட்டுவதாக நம்பிக்கை. விளக்கின் எண்ணெய்க்குழி, குடும்பப்பெண்ணின் ஆழ்ந்த உள்ளம், திரிகளிலிருந்து வரும் சுடர்களைப்போல ஐந்து குணங்களும் ஒருங்கிணைந்து ஒளிரும் போது இல்லம் இன்ப ஒளி வீசி பிரகாசிக்கும் என்ற நம்பிக்கை வலுவாக உள்ளது. மணமான பெண்களுக்கு நாம் வழங்கும் சீர்வரிசைகளில் குத்து விளக்கு முதலிடம் பெறுவதற்கு இந்த நம்பிக்கையும் ஒரு காரணமாகுமெனக் கருதப்படுகிறது.

வீட்டில் வடக்கு அல்லது கிழக்கு முகமாகவுள்ள சுவரில் படத்திலுள்ளவாறு வரைந்து வழிபாடு செய்து வருகிறோம். இவ்வழிபாட்டின் தத்துவத்திற்கான காரணம் என்ன என்ற வினாவிற்கு நம்மில் பலரால் சொல்ல முடியவில்லை. பெரும்பாலோர் இதுதான் வழக்கம் பரம்பரையாக இப்படித்தான் செய்துவருகிறோம் என்று கூறுகிறார்கள்.

விழிப்புணர்வு மிகுதியாக உள்ள இக்காலத்தில் எச்செயலையும் ஏன் எதற்கு என்று அறிந்து கொள்ளும் ஆர்வம் எல்லோரிடமும் உள்ளது. எனவே இவ்வழிபாட்டின் தத்துவத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் நம்மிடையே உள்ளது. இவ்வழிபாட்டை ஆராய்ந்து சற்று சிந்தித்து நோக்கில் இறைவனால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களும் நிகழ்த்தப்படுகின்றன.

இவ்வுலகில் மானிடராய் பிறந்த அனைவரும் நெறிமுறைகளைக் கடைப்பிடித்து வாழ்ந்த பின் என்றோ ஒருநாள் அனுப்பியவனிடமிருந்து (இறைவன்) அழைப்புவந்தபின் அவனிடமே (இறைவனிடம்) போய்ச் சேருகிறோம் என்ற நம்பிக்கையில் நிலைத்த மனிதன் நம்புகிறான். இது இயற்கை அதனால்தான் ஒருவர் இறந்ததும் அவர் உடலைவிட்டுவிட்டு இறைவனடிசேர்ந்தார், சிவபதம் அடைந்தார் என்றுதான் சொல்லுகிறோம். இறந்தவர் சிவன் திருவடிகளை அடைகிறார் என்ற எண்ணம் மேலோங்கியுள்ளது.

ஒன்றே தெய்வம் அதுதான் தன்னை பலவாறாகக் கொண்டு வழிபடுவார் பலருக்கும் அவரவர் குறித்து வணங்கும் உருவப் பொருளில் பல்வேறு திருமேனிகளில் தோன்றி அருள் செய்கின்றது என்னும் உண்மையினையும். அனைத்து தோற்றத்துக்கும் ஆதி முதலாகியதும் எல்லாவற்றிலும் இரண்டறக் கலந்து அனைத்திலும் காத்து அருள் பாலிக்கிறான்.

இறைவன் (பிறவா யாக்கை பெரியோன் என்று சிலப்பதிகாரத்தில் புகழப்படு

சிவபெருமான் அருவத்திரு மேனி (சிவம், சத்தி, நாதம், விந்து) அருவுருவத் திருமேனி (சதாசிவன்) உருவத் திருமேனி (மகேசன் உருத்திரன், விட்டுணு, பிரமன்) என்னும் ஒன்பது வடிவங்களிலும் வேற்றுமையின்றி நின்று அந்தந்தத் தொழில்களை செய்கிறான் என்னும் உண்மையை மிகத் தெளிவாக சிவஞானசித்தியாரில் அருணந்திசிவம் அருளிச் செய்த பாடல் கூறுகின்றது.

*சிவம், சத்தி, நாதம், விந்து*
*சதாசிவன், திகழும் ஈசன்,*
*உவந்து அருள் உருத்திரன் தான்,*
*மால், அயன், ஒன்றின் ஒன்றாய்ப்,*
*பவம்தரும் அருவம் நாலு: இங்கு*
*உருவம் நாலு: உபயம் ஒன்றாய்*
*நவம் தரு பேதம் ஏக*
*நாதனே நடிப்பன் என்பர்* சிவஞான சித்தியார்

இவ்வுண்மையை கூர்ந்து நோக்கினால் 'பிறவாயாக்கைப் பெருமான்' சிவன் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் நோக்கில் பல்வேறு வடிவங்களை ஏற்கிறார் மூன்று திருமேனிகளில் ஒன்பது வடிவங்களில் நின்று அந்தந்த தொழில் செய்வதை குறிக்கும் வகையில் மூன்று மூன்றாக மூன்று வரிசைகளில் கோடு இடுகிறோம் என்ற எண்ணம் ஓர் ஊகத்தின் அடிப்படையில் தோன்றுகிறது.

சிந்தனைக்குரிய இவ்வழிபாட்டுக்கான காரணத்தை ஆய்ந்துணர வேண்டும். எனவே ஆன்றோரும், சான்றோரும் மேலும் விளக்கம் அளித்தால் மிக்க பயனுள்ளதாக இருக்கும். அதை வரவேற்கிறோம்.

## நடுகல் வழிபாடு

தொல்லியல் ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்ட தமிழ் கல்வெட்டுக்களை அவர்கள் ஆய்வு செய்து அவ்வப்போது செய்திகளை வெளியிட்டு வருகின்றனர் அக்கல்வெட்டுக்களிலிருந்து 'நடுகல் வழிபாடு' இருந்து வந்ததையும் அறிகிறோம் தன்நாடு காத்தோ, தன் இனம் காத்தோ உயிர்நீத்த பெருவீரருக்கு நன்றி மறவாமல் நடுகல் எடுத்து வழிபாடு செய்வது தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவரும் வழக்கமாகும்.

போரில் வெற்றிவாகை சூடிய வீரர்கள் நடுகல்லில் மயிற்தோகைகளைச் சூட்டி வழிபாடு செய்துள்ளனர் '*நடுகற் பீலி சூட்டித் துடிபடுத்துத்*' என்ற அகநானூறு பாடல் 35:6-8 வரிகளால் அக்கால மக்கள் நடுகல் வழிபாடு செய்வதில் ஈடுபாடு கொண்டிருந்தனர் என அறிகிறோம்.

'கொங்கு நாட்டு வரலாறு' இல் கோவை கிழார் அவர்கள் எழுதியுள்ளது காணத்தக்கது. 'இறந்தவர்களையும் பெருமைப் படுத்துவதற்காகக் கற்கள் நட்டு வந்தார்கள் என்று முன்பே சொன்னோம். இவ்வழக்கம் புறநானூற்றிலும் புறப்பொருள்

புவெண்பா மாலையிலும் கூறியிருக்கக் காணலாம். போர்களில் புகழோடு வீழ்ந்த ஆடவனையோ, கணவன் இறந்த அவனுடன் உடன் கட்டை ஏறின கற்பிற் சிறந்த பெண்ணையோ நினைவூட்டும் பொருட்டு உருவகப்படுத்திச் சிலை நட்டு வணங்கி வந்தார்கள். அவைகளுக்கு வீரக்கல் மாசதிக்கல் என்ற பெயர்கள் வழங்கி வந்தன. திருமண நிகழ்வுகளில் நடுகல் வழிபாடு செய்து வருவது நடைமுறையிலுள்ளது

## மாப்பிள்ளை அழைப்பு

சுற்றமும் நட்பும் விரிவடைந்துள்ளதாலும் வீடுகளில் போதுமான வசதி குறைவாலும் திருமணம் பெரும்பாலும் திருமண மண்டபங்களில் நடைபெறுகிறது.

மாப்பிள்ளைக்கு புத்தாடைஅணிவித்து நன்கு அலங்கரிக்கப்பட்டு குதிரையின் மேல் ஊர்வலமாக அழைத்துவரும் பழக்கம் முன்பு இருந்தது. தற்போது இப்பழக்கம் ஏறக்குறைய மறைந்துள்ளது எனக் கூறலாம். நவீன நாகரிக உலகில் அறிவியல் வளர்ச்சியால் ஆடம்பர வசதியுடன் பலவகை ஊர்திகள் உள்ளன. சமுதாயத்தில தங்கள் நிலைப்பாட்டினை வெளிப்படுத்த ஒரு வாய்ப்பாக கருதும் வகையில் பலவண்ண மின்விளக்கு அலங்காரங்களுடன், பேண்டு வாத்தியம் முழங்க ஆடவரும் பெண்டிரும் அழகிய ஆடை அணிகலன்களை அணிந்து நறுமண வாசனையுடன் மலர்ந்த முகங்களோடு குழாங் குழாமாய் பின் தொடர மாப்பிள்ளை அழைப்பு நடைபெறுகிறது. மாப்பிள்ளை ஊர்வலத்தில் அணி அணியாக வரும் மகளிரும் ஆடவரும் பூசியுள்ள பலவகை நறுமண பவுடரும் சென்ட்டும் அவற்றின் தனித்தன்மையின்றி புதியதொரு மணத்தைப் பரப்புகிறது. இது எவ்வாறு உள்ளது என்றால் இன்னின்ன கலந்து அமைந்தால் இன்ன மணத்தை சாந்து பெறும் என்னும் முறைமைக்கு மாறாகப் பலவற்றையும் கலந்து அமைந்த சாந்து அவற்றின் தனித்தன்மையை உள்ளடக்கிப் புதியவொரு மணத்தைப் பரப்புவது போல வையைப் புதுப் புனலும் ஓர் புது மணத்தை உடையதாக விளங்கியது என்று வையையில் புது வெள்ள வரவினால் ஏற்பட்ட பலவகை நிலைகளை குறித்து மக்கள் பலவாறாக பேசியதை சுவையோடு விளக்கிய 'பரிபாடலின்' 7வது பாடல் நினைவிற்கு வருகிறது.

மணமகன் வீட்டில் மைத்துனர் குடை பிடிக்க நண்பர் மற்றும் உறவினருடன் திருமண மண்டபத்துக்கு அருகில் பொதுவாக கோயிலுக்கு வந்தபின் தங்கள் வருகை குறித்து திருமண மண்டபத்திலுள்ள பெண் வீட்டாருக்கு தெரிவிப்பார்கள்.

மேளதாள ஓசையோடு நாதசுர இன்னிசையுடன் மங்கலப் பொருள்தட்டுக்களை கையிலேந்திய மங்கையருடன் பெண்வீட்டார் வந்து மணப்பெண்ணின் சகோதரன் மாப்பிளையின் நெற்றியில் திலகமிட்டு காலில் வெள்ளியாலான மெட்டி போட்டு, மாலை அணிவித்து ஊர்வலமாக திருமண மண்டபத்துக்கு அழைத்து வருவர். வாயிலில் மணப்பெண்ணின் சகோதரி மாப்பிள்ளையின் பாதங்களை நீர்விட்டுக் கழுவி சுமங்கலிப் பெண்கள் இருவர் நல்வாழ்த்துக்கூறி ஆரத்தி (மஞ்சள்தூளும், சுண்ணாம்பும் கலந்த நீர்)எடுத்து மணமகன் மற்றும் மாப்பிள்ளைத்தோழனுக்கு திலகமிட்டு மண்டபத்தினுள் அழைத்துவருவார்கள். விருந்தினர்களை வரவேற்று சிறப்பான

விருந்தளித்து மகிழ்வார்கள்.

விருந்தளிப்பதில் ஒன்று சொல்லிக்கொள்ள வேண்டியுள்ளது. திருமணத்தில் குடும்ப நிலையை வெளிக்காட்டிக் கொள்வதாகக் கருதி பலவகை உணவு பண்டங்கள் விருந்தில் பரிமாறுகின்றனர். இலையில் பரிமாறப்பட்டுள்ள உணவு வகைகளில் உண்ண முடியாமல் இலையில் வைத்து விடுகின்றனர். இதனால் உணவு வீண் விரயமாகிறது செலவும் அதிகரிக்கிறது.

உணவு வகைகளின் எண்ணிக்கையைக் குறைத்து நம் வழக்கத்திலுள்ள சுவையான உணவு பரிமாறினால் வருவோரும் திருப்தியாக உண்பர். செலவும் குறையும். இத்தகு நிகழ்வுகளில் சிக்கனத்தை பின்பற்றுவது சற்று கடினமென தோன்றினும், வீண் ஆடம்பரத்தை தவிர்ப்பது நல்லது.

## நிச்சயதார்த்தம் (நிச்சய தாம்பூலம்)

பெண் பேசி உறுதி செய்த பின், பெண் வீட்டில் நிச்சயதார்த்தம் நடைபெறுகிறது. நிச்சயதார்த்தம் திருமணநாளிலும் நடைபெறுவது உண்டு. அவரவர் வசதிக்கேற்ப நிச்சயதார்த்தம் செய்து கொண்டு வருகிறோம். மணமகன் வீட்டார் கொண்டுவரும் மங்கலப் பொருள் தட்டுக்களை மணப்பெண்ணின் முன்வைத்து அதன் இருபக்கத்திலும் ஐந்துமுக குத்து விளக்கினை ஏற்றிவைத்து, வலப்பக்கம் மாப்பிள்ளை வீட்டாரும் இடப் பக்கம் பெண்வீட்டாரும் அமருவார்கள்.

மணமகனின் தாயார் நிச்சயப் புடவை, மலர்ச்செண்டுகளை தட்டில்வைத்து மணப்பெண்ணுக்கு கொடுத்து புத்தாடையை அணிந்துவருமாறு கேட்டுக் கொள்வார். பின்னர் மணப் பெண்ணை சபையோர் முன் அழைத்து வந்து அமரச் செய்வார். கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாடியுள்ளதாகக் கருதப்படும் 'நாட்டுப்புறப் பாடல்' அத்தகு காட்சி எவ்வளவு அழகுபட வர்ணித்துள்ளதைப் பார்ப்போம்.

*இணையோங்கு மங்கையரை ஏந்திழையைத் தானழைத்து*
*மந்தாரை மல்லிகையும் மரிக்கொழுந்தும் மாலையிட்டு*
*சந்தனம் புனுகு சவ்வாது மிகப் பூசி*
*ஆடை ஆபரணம் அழகுடன் பூண்டு*
*சந்திரரும் சூரியரும் சபையோரும் தானறிய*
*இந்திரனார் நல்லதங்கை இணையோங்க வந்தபின்பு*

இருவீட்டுப் பெண்களும் ஒருவர் ஒருவராக நறுமணச் சந்தனக் குழம்பை மணப்பெண்ணின் கைகள், முகத்திலும் பூசி, திலகமிட்டு பூச்செண்டு செரிந்து நலம் வழங்குவார்கள். சபையோரை வணங்கியபின் மணப் பெண்ணை அழைத்துச் செல்வதுடன் நிச்சயதாம்பூலம் நிகழ்வு நிறைவடைகிறது.

மகன், பெண்வீட்டார் தங்கள் தங்கள் குலம் (மரபு) கூறுதல் நடைபெறும் நம் உறவில் பல கூட்டங்கள் உள்ளன. அவற்றில் தெரிந்தவை இணைப்பு 2 ல் உள்ளன. இணைப்பில் இடம்பெறாத கூட்டங்களின் விபரம் தெரிவித்தால் இணைக்க...

முழுமையாக்க ஏதுவாகும்.

*கற்பெனப்படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியை*
*கொடைக்குரி மறபினோர் கொடுப்பக் கொள்வதுவே* (தொல்)

வீரத்தின் வெகுமதியாய் இருந்து முருகப் பெருமானுக்கு துணை நின்ற வீரபாகுத்தேவர் வம்சம் செங்குந்தர் குலம், (இன்ன) கூட்டம் (இன்ன) மாவட்டம், (இன்ன) வட்டம் (இன்ன) ஊரில் இருக்கும் (அ) மகன் (ஆ) (ஆ)மகன் (இ) (இ) மகள் திருவளர்ச்செல்வி 'கொடுத்தோம்' என பெண்வீட்டார் மொழிய வீரத்தின் வெகுமதியாய் இருந்து முருகப் பெருமானுக்கு துணைநின்ற வீராபாகுத்தேவர் வம்சம், செங்குந்தர் குலம், (இன்ன)கூட்டம் (இன்ன) மாவட்டம், (இன்ன) வட்டம். (இன்ன)ஊரில் இருக்கும் (அ) மகன், (ஆ) (ஆ)மகன் ( இ) ( இ )மகன் திருவளர்ச்செல்வன் 'கொண்டோம்' என மாப்பிள்ளை வீட்டார் வழிமொழிவர். இவ்வாறு மூன்று முறை மொழிந்து நிச்சயதார்த்தம் நடைபெறும்.

*'கொடுத்தோம் - கொண்டோம்'* என்று திருமணத்தின் போதும் செய்வது உண்டு. இது தொன்று தொட்டு இருந்து வரும் வழக்கமாகும். மணமகன் - மணமகள் மரபினை சபையோர் முன்னிலையில் கூறுவது மரபு என்பதை திருவிளையாடல் புராணத்திலிருந்தும் நாம் அறிகிறோம்.

பரஞ்சோதி முனிவர் அளித்துள்ள 'திருவிளையாடல் புராணத்தில்' முருகப் பெருமானின் பல திருவிளையாடல்களில் 'உக்கிரபாண்டியர் திரு அவதாரமும்' ஒன்று. அதில் எம்பெருமான் உக்கிர குமாரனுக்கு ஏற்ற திருவும், மரபும், குடியும், புகழும் உடைய அரச மரபை ஆராய்ந்து அமைச்சர்களும் அறிஞர்களும் சோமசேகரன் பெற்ற காந்திமதி என்னும் கன்னியைத் தேர்ந்தெடுத்தனர். திருமணநாள் குறிப்பிட்டு அந்தநாளும் வந்தது

திருமணப் பந்தலில் உயர்ந்தோர் நல்ல மறைகளைப் புகல 'சூரியன்' மரபினனாகிய சோமசேகரன் என்னும் பெயருடைய யான் 'சந்திர' குலத்தை (திங்கள் மரபு) விளக்கும்படி வந்தருளிய சுந்தரபாண்டியன் திருப்புதல்வனாகிய கடல் சூழ்ந்த உலகத்தைப் பாதுகாக்கும் உக்கிரவருமருக்கு என் புதல்வியாகிய குராமலரை அணிந்த கூந்தலுடைய காந்திமதியை இப்பொழுது 'கொடுத்தேன்' என்று நீர் வார்த்து அளித்தான் என திருவிளையாடல் புராணத்தில் பரஞ்சோதியார்

*இரவிதன் மருமான் சோமசேகரன் என்பேர் திங்கள்*
*மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன்*
*உரவுநீர் ஞாலந் தாங்கும் உக்கிர வருமற் கின்றென்*
*குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தன னெனநீர் வார்த்தான்*

## வெற்றிலை பிடித்தல்

இந்நிகழ்ச்சி நிச்சயதார்த்தம் முடிந்ததும் நடைபெறுகிறது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டு வெற்றிலை அதில் பாக்கும் வைத்து எடுத்துக் கொள்வர். மாப்பிள்ளை வீட்டார் முதலில் விநாயகப் பெருமானை மனதில் இருத்தி அவருக்கு எடுத்து வைப்பார்கள். பெண் வீட்டாரும் அவ்வாறே செய்வார்கள். பின் சிவபெருமான் முதல் குலதெய்வம் ஈராக பல தெய்வங்களை நினைத்து திருநாமங்களைக் கூறி இருவீட்டாரும் அத்தெய்வங்கள் ஒவ்வொன்றுக்கும் வெற்றிலை பாக்கை அர்ப்பணிப்பார்கள்.

அவ்வெற்றிலை பாக்கை முதலில் பெறும் உரிமை உள்ளவர்கள்

1. ஊர் பட்டக்காரர்
2. ஊர் நாட்டாண்மைக்காரர்
3. ஊர் பெரியதனக்காரர்

பின் உற்றார் உறவினர்களுக்கும் மகிழ்வுடன் வெற்றிலை பாக்கு கொடுத்து நிகழ்ச்சியை நிறைவு செய்வர்.

## மணப்பந்தலில் திருமண நிகழ்ச்சி

மணப்பந்தல் அலங்காரம் செய்வதற்கு இக்கலையில் கைதேர்ந்த கலைஞர்கள் பலர் உள்ளனர். அவர்களது கைவண்ணத்தில் நிறத்தால் வேறுபட்ட நல்ல நல்ல மலர்களாக எடுத்துக் கலந்து தொடுக்கப்பட்ட மணமிக்க மாலைகள் தோரணங்களாக அழகு செய்ய, பன்னிற மின்விளக்குகள் பிறபல கவர்ச்சியான அமைப்புகள் இயற்கை அழகுடன் பார்ப்போர் கண்களையும் மனத்தையும் ஈர்க்கும் வண்ணம் திருமண மேடை அலங்கரிக்கப்படுகிறது.

உற்றார், உறவினர், நண்பர்களுக்கு பன்னீர், நறுமண சந்தனம், நறுமண மலர்கள் அளித்து அன்புடனும் இன்முகத்துடனும் மாப்பிள்ளை பெண் வீட்டார் வரவேற்கிறார்கள்.

இத்தகு இனிய மங்களகரமான சூழ்நிலையில் மணமகன்-மணமகள் மண மேடைக்கு அழைத்து வந்து அமரச் செய்வார்கள் கவிச்சக்கரவர்த்தி கம்பர் நாட்டுப்புறப் பாடலில் நம் கண் முன்னே கொண்டு வரும் அத்தகு அழகிய காட்சி:

*மந்தாரை மல்லிகைப்பூ மருக்கொழுந்து மாலையிட்டு*
*சந்தனம் புனுகு சவ்வாது மிகப் பூசி*
*முல்லை யிருவாட்சி முனைமுறியாச் சண்பகம்பூ*
*தண்டைமாலை கொண்டை மாலை சொர்னமாலை*
*தொடைமாலை*

*ஆடையாபரணஅலங்கிருதஞ் செய்த பின்பு*
*பொட்டுமிட்டு பொன்முடிந்து போதவே யலங்கரித்து*
*நட்டு முட்டுத்தான் முழக்க நாட்டார் சபைக்கு வந்து.*

அத்தனை பேரும் அனைவோரும் வந்திறங்கி
தாய்மாமன் முன்னே தவறாமல் பொட்டுமிட்டு
நாற்காத முள்ள நகரிலுள்ள பந்தலுக்கு
ஐங்காத முள்ள அகலமுள்ள பந்தலுக்கு
அன்னங்கள் நின்று அலங்கரிக்கும் பந்தலுக்கு
தும்பிகள் நின்று துவண்டாடும் பந்தலுக்கு
வண்டுகள் நின்று மனங்குளிரும் பந்தலிலே
இன்பமுடன் மாப்பிள்ளையை இருத்தியே

பெண்களுக்கு வாழ்க்கையில் மங்களகரமான நாள் திருமணநாள். பண்டைக்காலத்திலிருந்தே தமிழ்ச் சமுதாயத்தில் பெண்களைப் பெற்றவர்கள் தாங்கள் சீராட்டி, பாலூட்டி, சீராட்டி வளர்த்த மங்கைக்கு, அழகுப் பெட்டகத்துக்கு வகைவகையான நறுமணச் சாந்துகள் பூசியும், மணமிக்க பன்னிற மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகள், செண்டுகளால் அலங்கரித்து பட்டாடை அணிவித்து ஆபரணங்கள் பூட்டி அழகு பார்த்தார்கள் என்பதை எவ்வளவு நயத்தோடும் உருக்கத்தோடும் இந்நாட்டுப்புறப்பாடல் வெளிப்படுத்தியுள்ளது. மங்கல நிகழ்வுகளில் அதுவும் குறிப்பாக திருமண நிகழ்ச்சிகளில் மகளிர் தம்முடைய அழகை மிகுவிக்க அழகிய ஆடை அணிகலன்களை அணிந்து மலர்ச்சியுடன் கலந்து கொள்வார்கள்.

அழகுடன் தோற்றமளிக்கும் மங்கையர்களைவிட மணப்பெண் மிக்க அழகுடன் தோற்றமளிக்கவேண்டும் என்ற எண்ணத்தால் மணப் பெண்ணை அலங்கரிப்பதில் கவனம் செலுத்தப்படுகிறது. சிகை அலங்காரம், உடை அலங்காரம் . அணிகலன்கள் அணிந்தபின் மணப்பெண்ணைப் பார்க்கும் பெற்றோரே இவள் தங்கள் பெண்தான என வியப்புறுமாறு மணப்பெண்ணை அழகு செய்து விடுகிறார்கள் 'மகளிர் அழகு நிலையத்தார்'.

மேலும் அணிகலன்கள் அணிபவருக்கு அழகூட்டும் ஆனால் அவ்வணிகலன்களே இம் மங்கைக்கு அணியானதால் அதற்கு அழகு தந்ததோ என ஆராய்வாரின் ஆராய்ச்சிகள் ஒரு முடிவுக்கு வருதலன்று என்னுமாறு மணப்பெண் அலங்கரிக்கப்படுகிறாள்.

சீர்காரப் பெண்டிர் நன்நீர் நிறைத்த சொம்புடன் முன்வர 'வாராயென் தோழி வராயோ' 'மணப்பந்தல் காண வாராயோ' என தோழிகள் மணப்பெண்ணை அழைத்து மணவறையை வலம்வந்து மணமகனின் வலப்பக்கத்தில் அமரவைப்பர்.

## மணவறையில் மங்கல நிகழ்வுகள்

திருமணம் செய்யும் முறை இன்று பலவாராக உள்ளன.

1. பெரியவர் முன்னிருந்து நடத்திவைத்தல்
2. திருநெறிய தமிழ் முறைப்படி நடத்திவைத்தல்
3. வைதீக முறைப்படி நடத்திவைத்தல்

'திருமணம்' என்ற மங்கல நிகழ்வு தொன்றுதொட்டே இருந்து வந்துள்ளதென்பதை சங்க இலக்கியங்களிலிருந்தும், புராணங்களின் வாயிலாகவும் அறிகிறோம். அகநானூறு, சிலப்பதிகாரம், கச்சியப்ப முனிவரின் கந்த புராணம், சேக்கிழார் சுவாமிகளின் பெரியபுராணம், பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம், ஆகியவைகளிலும் காணலாம்.

திருமணநிகழ்வுகளில் சடங்குகள் தொன்று தொட்டு இருந்துவந்துள்ளன. சடங்குகள் ஒவ்வொன்றிலும் அர்த்தம் உள்ளது. வைதீக முறைப்படி நடைபெறும் திருமணங்களில் புனித மந்திரங்கள் பெரும்பாலும் வடமொழியில் சொல்லப்படுகிறது. அதனால் திருமணத்தில் நிகழ்த்தப்படும் சடங்கு ஏன் செய்யப்படுகிறது? அதன் பொருள் என்ன? நமது முன்னோர்கள் எந்த அடிப்படையில் அமைத்துள்ளனர் என்பது பெரும்பாலோரால் அறிந்துகொள்ள முடிவதில்லை.

மேலும் ஒவ்வொரு சடங்கு, கூறப்படும் மந்திரம் ஏன்? எதற்கு? என்று அறிந்து கொள்ளும் ஆர்வம் இக்காலத் தலைமுறையினரிடையே மேலோங்கியுள்ளது. எனவே தாய்மொழியில் சொல்லும் போது எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது. இதனை வலியுறுத்தும் வண்ணம் 'திருநெறிய தமிழ் முறையில்' திருமணங்கள் நடைபெறவேண்டும் என்ற எண்ணம் பலரால் வரவேற்கப்படுகிறது. 'திருநெறிய தமிழ் முறையில்' மிக்க ஈடுபாடுகொண்ட அன்பர்களால் திருமணங்கள் நடத்திவைப்பதை நாம் கண்டுவருகிறோம். கீதையில் கண்ணன் - "அத்தனை சொல்லையும் அறிவினில் போட்டுத் தேர்ந்து தெளிந்து செய்வதைச் செய்க நீ" என்கிறார் (பகவத்கீதை 18:63)

எது எவ்வாறு இருப்பினும் எதைப்பற்றி யார் என்ன கூறினாலும் அவற்றை அப்படியே ஏற்காமல் அவற்றின் உண்மையை ஆராய்ந்து தெளிக என வலியுறுத்தியுள்ளார் திருவள்ளுவர்.

*எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*
*மெய்பொருள் காண்ப தறிவு* (குறள்423)

*எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு* (குறள்355)

ஆகையால் நடைமுறையிலுள்ள திருமணமுறைகளை ஆராய்ந்து, தெளிவு கொண்டு அவரவர் எண்ணத்திற்கும் விருப்பத்திற்கும் தக்கவாறு தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

மணவறையில் நடைபெறும் சில குறிப்பிட்ட நிகழ்வுகளான காப்பு (கங்கணம்) அணிதல், திருமாங்கல்யம் அணிவித்தல், மாலைமாற்றல், அருகு மணம் எடுத்தல், ஆராத்தி எடுத்தலுக்கான சிறு விளக்கம்.

## முளைப்பாரி வைத்தல்

தண்ணீரில் நன்கு நனைக்கப்பட்ட நவதானியங்களை வெள்ளைத் துணியால் முடியிட்டு கட்டிவைத்துக் கொள்ளவேண்டும். அகன்ற வாயினையுடைய மண் பாண்டத்தில் செம்மண் நிரப்பி அதில் முளையிட்டுள்ள நவதானியங்களைப் பரப்பி நீரிட்டு வளர்த்த முளைப்பாரியை மணமேடையில் வைத்துக்கொள்ள வேண்டும். திருமண நிகழ்வுகள் நிறைவடைந்த பின்பு தீபாராதனை செய்து மங்கலப் பெண்கள் முளைப்பாரியை எடுத்துச் சென்று நீர் நிலையில் நீரினில் கலந்து விடுவார்கள்.

*விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை*
*முளைக்கும் நிரையினர் முகிழ்த்த மூரலர்.* . . . . . . . (1:58,59)

அரும்பி புன்முறுவலுடன் கூடிய மகளிர் சிலர் விளக்கினை ஏந்தியும், சிலர் முளைப் பாலிகை ஏந்தியும் கோவலன் கண்ணகி திருமண ஊர்வலத்தில் சென்றனர் என்றும் சிலப்பதிகார அடிகளில் இருந்து இவ்வழக்கம் பண்டைக் காலத்திலிருந்து நடைமுறையில் உள்ளதென அறிகிறோம்.

## காப்பு அணிதல்

ஆம்; பெண்ணிற்குத் 'தற்காப்பு' வேண்டும்; தாய்,தந்தை 'காப்பு' வேண்டும்; தெய்வத்தின் 'காப்பு' வேண்டும்; இந்தக் காப்புகளுக்காகவே கையில் 'காப்பு' அணியப்படுகிறது. 'அவளைக் காப்பேன்' என்ற உத்தரவாதத்திற்காகவே கணவன் கையில் 'காப்பு'க் கட்டப்படுகிறது (7)

## திருமாங்கல்யம் அணிவித்தல்

குறிப்பிட்ட நல்ல வேளையில் உற்றார் உறவினர் பலர் முன்னிலையில் மணமகன், மணமகள் கழுத்தில் மங்கல நாணை - திருமாங்கல்யத்தை அணிவிக்கிறான்.

நான் சிரஞ்சீவியாக இருப்பதற்கு காரணமான இந்த மாங்கல்யக் கயிற்றை உன் கழுத்தில் கட்டுகிறேன் என மணமகன் மனதில் நினைத்துக் கொள்கிறான். என்னும் கருத்து நிலவுகிறது.

"மாங்கல்யத்தில் மூன்று முடிச்சுப் போடுவதேன்?
ஒரு முடிச்சு கணவனுக்கு அடங்கியவள் என்றும், மறு முடிச்சு தாய் தந்தையருக்குக் கட்டுப்பட்டவள் என்றும், மூன்றாவது முடிச்சு தெய்வத்துக்குப் பயந்தவளென்றும் உறுதி கொள்ள வைப்பதே " (7)

திருமாங்கல்யம் அணிவிக்கும் வேளையில் உரத்த குரலில் நாதசுரமும் கெட்டிமேளமும் வாசிக்கப்படுகிறது. ஏனெனில் அந்த நல்ல நேரத்தில் ஏதாவது ஒரு குழந்தை அழலாம், கூட்டத்தில் எவராவது தும்மலாம், அல்லது திருமணமண்டபத்துக்கு வெளியே நின்று கொண்டிருப்பவர் ஏதேனும் அமங்கல வார்த்தை கூறி மற்றவரிடம் பேசிக் கொண்டிருக்கலாம். மணமக்கள் இருவரும் இன்ப உணர்வோடு ஒருமனதாக இருக்கும் வேளையில் அத்தகைய வார்த்தைகள் மணமக்கள் காதில் விழாமல் இருக்க

கெட்டிமேளம் கொட்டப்படுகிறது என்ற கருத்து நிலவுகிறது.

இந்தச் சுபவேளையில் கூடியுள்ள பெரியோர்கள் அட்சதை (மஞ்சள்தூள் கலந்த அரிசி, மலர்கள்) தூவி மணமக்களுக்கு நல்வாழ்த்து கூறி வாழ்த்துகின்றனர்.

*ஆல்போல் தழை தழைத்து அறுகுபோல் வேரூன்றி*
*மூங்கில்போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருக்க*
*பார்த்தவர்களெல்லோரும் பதினாறும் பெற்றெடுக்க*
*கேட்டவர்களெல்லோரும் கிளை கோத்திரமாய்*
*வாழ்ந்திருக்க..*

என்னும் வாழ்த்து கவிச்சக்கரவர்த்தி கம்பரால் பாடப் பட்டதாகக் கருதப்படுகிறது. பாடல் எத்தனை உருக்கத்தோடு மணவிழாவில் கலந்துகொண்டவர்கள் கூறும் வாழ்த்துச் சொற்களை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

நல்ல ஒலி அலைகள் பரவி மங்களம் பெருகவும், திருமணம் மற்றும் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா போன்ற மங்கள நிகழ்ச்சிகளில் தம்பதிகள் இறைவன் அருள் பெற்று எல்லா நலமும் பெற்று வாழ திருஞான சம்பந்தப் பெருமான் அருளிய தேவாரம் பண்கொல்லி - 3 ம் திருமுறை (இணைப்பு 3)

பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க என மணமக்களை வாழ்த்துகிறோம். அப்பதினாறு பேறும்:

*கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்*
*கபடுவா ராத நட்பும்*
*கன்றாத வளமையும் குன்றாத இளமையும்*
*கழுபிணியி லாத உடலும்*
*சலியாத மனமும் அன் பகலாத மனைவியும்*
*தவறாத சந்தானமும்*
*தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்*
*தடைகள் வாராத கொடையும்*
*தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு*
*துன்பமில்லாத வாழ்வும்*
*துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப்பெரிய*
*தொண்டரொடு கூட்டு கண்டாய் ;*
*அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே !*
*ஆதிகடவூரின் வாழ்வே !*
*அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !*
*அருள்வாமி ! அபிராமியே*

(அபிராமிஅம்மை பதிகம்)

சங்க இலக்கியம் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று அகநானூறு பாடல் 86 திருமணத்தின் போது நடைபெறும் சடங்குகளை வரிசையிட்டுள்ளது. இப்பாடலை

பாடியுள்ளவர் புலவர் நல்லாவூர் கிழார். இப்பாடலில் சொல்லியுள்ள கருத்துக்கள்:-

இல்லத்தில் வரிசையாக கால்கள் நடப்பட்ட திருமணப்பந்தலில் மணல் பரப்பி மாலைகள் தொங்கவிடப்படும். விளக்குகளை ஏற்றி வைப்பார்கள் ஒரு நல்ல நாளில் இருள் நீங்கியுள்ள அழகு பொருந்திய விடியற் காலைப் பொழுதில் மணத்தினைச் செய்து வைக்கும் வயது முதிர்ந்த மங்கல மகளிர் தண்ணீரைக் குடங்களில் நிரப்பி தம் தலைமேல் வைத்து கொண்டு வந்து அகன்ற வாயையுடைய கலத்தில் ஊற்றிக் கொடுப்பர். மக்களைப் பெற்றெடுத்த மங்கல பெண்கள் நால்வர் கூடி அத்தண்ணீரை வாங்கி அதில் பூக்கள் நெல்மணிகளை இட்டு வைப்பர். கற்பு நெறியிலிருந்து வழுவாமல் தன்னைக் கொண்ட கணவனை விரும்பி பேணும் விருப்பமுள்ள துணைவியாக நீ வாழ்வாயாக என வாழ்த்தி, பூவும் நெல்மணிகளும் கலந்த நீரை மணமகள் தலையின் மேல் ஊற்றி, கரிய கூந்தலில் பூவும் நெல்லும் விளங்க மங்கலநீராட்டுவர். இவ்வாறு வதுவை கலியாணம் நிகழ்ந்தது என சொல்லுகிறது பாடல்:

*உழுந்துதலைப் பெய்த் கொழுங்களி மிதவை*
*பெருச்சோற் றமலை நிற்ப நிரைகால்*
*தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி*
*மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்*
*கனையிருள் அகன்ற கவின்பெறு காலை*
*கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்*
*கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென*
*உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்*
*பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்*
*முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்*
*புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று*
*வாலிழை மகளிர் நால்வர் கூடிக்*
*கற்பினின் வழாஅ நற்பல உதவிப்*
*பெற்றோற் பெட்கும் பிணையை யாகென*
*நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி*
*பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க*
*வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்*
*கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து*
*பேரிற் கிழத்தி யாகெனத்* (அகநானூறு 86: 1-19)

இப்பாட்டில் மணமகன் மணமகளுக்கு தாலிகட்டும் சடங்கு இருந்தற்கான குறிப்பு இல்லை.

திருமணத்தின் போது நடைபெறும் எல்லாச் சடங்குகளையும் குறிப்பிட்டுள்ள போதும் தாலிகட்டும் சடங்கு குறிப்பிடப்படவில்லை. இதை நோக்கும் போது திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்கு தாலிகட்டும் பழக்கம் பண்டையத் தமிழ் மக்களிடையே நிலவவில்லை என்னும் எண்ணம் தோன்றுகிறது.

தமிழ் மொழியில் சிறந்த இலக்கியமாக விளங்கி வரும் காப்பியம் சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி இருவரையும் அவர்தம் பெற்றோர் ஒரு பெரு நாளிலே திருமண கோலத்தில் காண விரும்பினர். திருமண நாளன்று முரசுகள் ஒலித்தன. சங்குகள் முழங்கின மங்கல நாணும் ஊர்வலமாகச் சென்றது. கற்புடைய கண்ணகியை கோவலன் மிகவும் வயதான அந்தணன் வேத நெறிப்படி சடங்குகளை நிகழ்த்த மணந்து தீயினை வலம் வந்தனர் என திருமண நிகழ்ச்சியை விவரிக்கும்.

சிலப்பதிகாரவரிகள்:

*முரசியம்பின முருடதிர்ந்தன முறை எழுந்தன*
*பணிலம் வெண்குடை*

*அரசெழுந்ததொர் படியெழுந்தன அகலுள்*
*மங்கல அணி எழுந்தது*

*மாலைதாழ் சென்னி வயிர மணித் தூணகத்து*
*நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்*
*வானூர் மதியம் சகடு அணைய வானத்துச்*
*சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்*
*மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்*
*தீவலம் செய்வது காண்பார் கண் நோன்பு என்னை*

(சிலப்பதிகாரம் 1: 46-53

மங்கலநாண் ஊர்வலமாகச் சென்றதை சுட்டியபோதும், கோவலன் கண்ணகிக்கு தாலி கட்டியதாக குறிப்பிடப் படவில்லை.

திருமணமான பெண்கள் மங்கல நாண் அணிந்திருக்க வேண்டும் என்ற கருத்தில் திருமண நாளன்று மங்கல நாண் ஊர்வலமாக எடுத்துச் செல்லும் பழக்கம் இருந்திருக்க வேண்டும் என அறிகிறோம்.

*ஏக்கழுத்து நாணாற் கரும்பின் அணை மென்றோள்* (பரிபாடல் 7:55)

கழுத்தில் பொற்கயிறு பூண்டிருக்கும் பெண்கள் என்ற பரிபாடல் வரிகளிலிருந்து பெண்கள் கழுத்தில் பொன் நாண் அணிந்துள்ளனர் எனத் தெரிகிறது.

பரஞ்சோதி முனிவர் அருளிச் செய்த 'திருவிளையாடல் புராணம்', கச்சியப்ப முனிவர் அருளிச் செய்த 'கந்த புராணம்', ஆகிய புராண வரலாறுகளில் திருமணத்தின் போது மங்கல அணி பூட்டுவது குறித்து என்ன சொல்லியுள்ளன என பார்ப்போம்.

நான்கு வேதங்கள் ஒலிக்கவும் சங்குகள் முழங்கவும் வேதங்களை உணர்ந்த பிரமன் வேத சிவாகமம் கூறிய முறைப்படி திருமணச் சடங்குகளை குறைவின்றி முடிக்க இருவகைப் பற்றும் அற்றவர்க்கே வீட்டின்பத்தை அருளும் பரமயோகியாகிய இறைவன் திருமங்கல நாணைப் பூட்டி எல்லா உலகங்களையும் பெற்று அருளிய பிராட்டியாரின் சிவந்த கரங்களைப் பற்றியருளினான் என

*சுற்றுநான் மறைக ளார்பத் துரியஞ் சங்க மோங்கக்*
*கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த வாற்றான்*

*முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை*
*பற்றினான் பற்றி வார்க்கே வீடருள் பரம யோகி* (8)

திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவரும். பிரமன் மங்கல நாண் எடுத்துக் கொடுக்க அதை வாங்கி முருகப் பெருமான் இந்திரன் மகள் இந்திராணியின் திருக்கழுத்தில் கட்டி மாலை அணிவித்தார் என

*செங்கம லத்திறை சிந்தையின் ஆற்றி*
*அங்கையின் ஈந்திட ஆண்டகை கொண்ட*
*மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து*
*நங்கை முடிக்கொர் நறுந் தொடை சூழ்ந்தான்* (9)

ந்த புராணத்தில் கச்சியப்ப முனிவரும் சொல்லுகிறார்கள்

ஆதிசங்கரர் இயற்றிய 'சௌந்தர்ய லகரி' சுலோகம் ஒன்றில் அன்னை ாராசக்தியின் கழுத்தில் பிராகாசிக்கும் மூன்று ரேகைகள் விவாக காலத்தில் நன்றாய் ட்டப்பட்ட பல நூல்கள் கொண்ட சரட்டின் எண்ணிக்கையை ஞாபகப்படுத்துவது போல விளங்குகின்றன என்ற குறிப்பு உள்ளது (10)

மற்கண்ட குறிப்புக்களிலிருந்து நாம் அறிவது -

திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்கு தாலிகட்டும் பழக்கம் பண்டைத் மிழ் மக்களிடையே நிலவவில்லையெனவும், திருமணமான பெண்கள் மங்கல நாண் ன்றை அணிந்திருக்க வேண்டும் என்ற கருத்தில் திருமண நாளன்று மங்கல நாண் ர்வலமாக எடுத்துச் செல்லும் பழக்கம் இருந்ததை சிலப்பதிகாரத்திலிருந்தும், ருமணச் சடங்கில் மங்கல நாண் பூட்டுவது இருந்துள்ளது என்பது பரஞ்சோதி னிவர் அருளிச் செய்த 'திருவிளையாடற் புராணம்' கச்சியப்ப முனிவர் அருளிச் சய்த 'கந்தபுராணம்' ஆகிய புராண வரலாறுகளிலிருந்தும் அறிகிறோம்.

திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்கு தாலிகட்டும் மரபினை நம் ன்னோர்கள் நடைமுறையில் கொண்டு வந்துள்ளனர். நம் முன்னோர்களின் ழக்கத்தை நாமும் கடைப்பிடித்து வருகிறோம். திருமணமான பெண்கள் கழுத்தில் லியும் காலின் இரண்டாவது விரலில் மிஞ்சியும் மங்கல அணியாக ணிந்துகொள்வது நம் மரபு ஆகும்.

## ாலை மாற்றல்

'துக்ளக்' ஆசிரியர் 'சோ' அவர்கள் சொல்லாக்கத்தில் விளக்கம்.

"ஒருத்தர் போட்ட மாலையை, இன்னொருத்தர் போடக்கூடாதுன்னுதான் சாஸ்திர திகள் சொல்லறது. ஆனா, விவாஹத்தினாலே கணவன், மனைவி இரண்டு பேருமே ன்றாக்கப்படுகிறார்கள். இரண்டு பேருமே ஒண்ணா சேர்ந்த பிறகு, 'அந்நியர் ருவர் போட்ட மாலை' ன்ற பேச்சுக்கு இடமில்லையே?. அதனாலே இது சாஸ்திர ரோதமில்லை. மாலையிலே இருக்கிற புஷ்பங்களின் வாசனை, மணமக்களின்

மனநிலையைக் குறிக்கிற மாதிரி சொல்லப்படறது. கணவன் தான் போட்டுண்ட மாலையை மனைவி கழுத்திலே போடும்போது 'என் மனநிலை இதுன்னு காட்டுகிறான். அவளும் 'உமது மனநிலையை நான் ஏற்றேன்' எனகிற பாவனையில் அந்த மாலையை ஏத்துக்கிறா. 'என் மன நிலை இது இனி இது தனியாக இயங்காது. உம்மிடம் இதைச் சமர்ப்பிக்கிறேன்' என்று சொல்ற அர்த்தத்தில், தான் அணிந்திருந்த மாலையை புருஷன் கழுத்திலே போடறா மனைவி தன்னிச்சையாக வாழாமல், கணவனுடன் பரிபூரணமாக ஒன்றி இருவரும் மனவேறுபாடு இல்லாமல் வாழனுங்கிறதைத்தான் இந்த மாலை மாத்தற பழக்கம் சுட்டிக்காட்டறது ''(11)

'அம்மி மிதித்தல்'. 'அருந்ததி பார்த்தல்' கவியரசு கண்ணதாசன் அவர்கள் விளக்கம்: (7)

அம்மி மிதிக்கிறார்களே ஏன்?

எல்லாக்குடும்பங்களுக்கும் இன்றியமையாதது அம்மி. அந்த அம்மியின் மீது காலை வைப்பது என் கால் உன் மீது தான் இருக்கும். உன்னைத் தாண்டிப் போகாது என்று சத்தியம் செய்வதே.

'படிதாண்டாப் பத்தினி' என்பது வழக்கு.

'படியைத் தாண்ட மாட்டேன்' என்பதை அம்மியின் மீது சொல்லப்படுவது.

அருந்ததியைப் பார்ப்பது ஏன்?

'அருந்ததியைப் போல் நிரந்தரக் கற்பு நட்சத்திரமாக நின்று மின்னுவேன்' என்று ஆணையிடுவதே.

## அருகுமணம் எடுத்தல்

மணமக்களுக்கு பெரியோர்கள் நல்வாழ்த்துக்கூறி ஆசீர்வாதம் செய்தல். இது வெற்றிலையை சிறிது சிறிதாகக் கிள்ளி எடுத்து பாலில் நனைத்து இரண்டு கைகளிலும் பிடித்து மணமகனின் முழங்காலுக்கு மேலும், இரு தோள்களிலும் தொட்டு தலைக்குப்பின் வீசிவிடுவார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள். இதே போல் மணப்பெண்ணுக்கும் செய்வார்கள்.

## மங்கலவாழ்த்து

மணமகன் இருகைகளையும் மைத்துனர் கோர்வை செய்து அதில் அரிசியை நிறைத்து அமரவைப்பார்கள். ஊர்க்குடிமகன் (முடிதிருத்துபவர்) இருவர் நெற்றியில் விபூதிபூசி திலகமிட்டு மாலை அணிவித்து மங்கலவாழ்த்து பாடுவார். (இணைப்பு 5)

## சூரியவழிபாடு

நாம் அறிந்த சுடர்களுள் மிகப் பெரியது சூரியன். சூரியன் கண் கண்ட தெய்வம். சூரியன் எழுந்தால் உலகம் முழுவதும் ஒரு தனிக் கிளர்ச்சி அடைகிறது. உயிருள்ள பொருள்களும் உயிர் இல்லாத பொருள்களுக்கும் உரத்தைத் தந்து வளத்தைத் தருவது

புற இருளை நீக்கி உலகம் முழுவதும் உலா வருகிறது. இத்தகைய சூரியனை நாம் வழிபடுகிறோம்.

'உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு .......... (திருமுருகாற்றுப் படை 1-2)

## ஆரத்தி எடுத்தல்

திருமணம் இனிதே நிறைவேறியதற்கு இறைவனை வணங்கி இரண்டு சுமங்கலிப் பெண்கள் மணமக்களுக்கு ஆரத்தி எடுக்கிறார்கள். ஆரத்தித்தட்டில் இருக்கும் மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த தண்ணீரை வெளியில் கொட்டுகிறார்கள். இதன் நோக்கம் தீய சக்திகளால் மணமக்களுக்கு இடையூறு வரக்கூடாது என்பதாகும்.

## மாலையைக் கழட்டுதல்

மணமகன் அணிந்துள்ள மாலையை மணமகளின் தாயார் மரியாதை செய்து மணமகனின் கழுத்திலிருந்து மாலையை எடுத்து வைப்பார். இதே மாதிரி மணமகள் மாலையை மணமகனின் தாயார் மாலையை எடுத்து வைப்பார். மணமக்களை பால் பழம் சாப்பிடச் செய்வர். பாலோடு சேர்ந்து பழம் சுவை பெருவதுபோல் இல்வாழ்க்கை சுவை பெற வேண்டும் என்ற கருத்து பொதிந்துள்ளது.

## மஞ்சள் நீர் விளையாட்டு

திருமணமாவதற்கு முன்னும் பின்னும் மணமகனும் மணமகளும் கூச்சப்படுவது இயற்கை. குறுகிய வாயுடைய பாத்திரத்தில் நீர் விட்டு அதனுள் பொன், வெள்ளி ஆபரணத்தை (மோதிரம்) வைத்து எடுக்கச் செய்வதால் பாத்திரத்திலுள்ள ஆபரணத்தை எடுக்க இருவரும் கையை விடுவார்கள். அப்போது ஒருவர் கை ஒருவர் மீது படும்போது நாணமும் கூச்சமும் சற்று விலகும் என்ற கருத்தில் செய்யப்படுகிறது.

## பெண்ணை மாப்பிள்ளை வீட்டுக்கு அனுப்பி வைத்தல்

திருமண நிகழ்ச்சிகளில் கலந்து உறவாடி மகிழ்ந்திருந்த உற்றார் உறவினர்கள் மணமக்களை மணமகன் வீட்டிற்கு அனுப்பி வைத்துக் கொடுப்பார்கள். நீராட்டி, பாலூட்டி, சீராட்டி இவ்வளவு காலமும் வளர்த்து வந்துள்ள தம் மகளை ஓர் ஆடவனுடன் முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையிலுள்ள மணமகன் இல்லத்திற்கு அனுப்பிவைக்கிறோமே என்ற எண்ணம் மனதில் வரும்போது எவ்வளவுதான் மன உறுதியுடைய பெற்றோராயினும் குறிப்பாக தாய்மார்கள் கண்கலங்கிவிடுவார்கள்.

எனினும் சந்தன மரங்கள் மலையில் விளைந்தாலும் அச்சந்தன மரங்களால் மலைக்குப்

பயனில்லை. நறுமணச் சந்தனக் குழம்பினை பூசுபவரே பயன்பெறுகிறார். அழகிய முத்துக்கள் கடலில் பிறந்தாலும் கடல் அம்முத்துக்களால் பயனடைவதில்லை. அம்முத்துக்களை அணியாக அணிபவர்களுக்கே அழகைத் தருகிறது. சந்தன மரமு முத்துக்கள் தாங்கள் பிறந்த இடத்திற்கு பயன் தருவதில்லை என்னும் உவமையை மனதில் கொண்டு குறிப்பிட்ட பருவத்தில் தம் மகளும் பெற்றோரிடமிருந்து விலகி சிறந்த கணவனுடன் இல்வாழ்க்கை மேற்கொள்வதே உலகியல் நியதி எனக் கருதி மனக்கலக்கத்தை வெளிகாட்டிக் கொள்ளாமல் முகத்தில் மலர்ச்சியைத் தேக்கி தம் மகளை அனுப்பிவைப்பார்கள்.

மணமகன் ஊர் எல்லையிலிருந்து மேளதாளம் முழங்க நாதசுர, இன்னிசையுடன் மணமக்கள் மணமகன் வீட்டை அடைவார்கள். 'வலக்காலை' எடுத்தவைத்து வீட்டுக்குள் செல்லுங்கள் என்று மணமக்களுக்கு அறிவுறுத்துவார்கள். 'வலம்' என்றால் வெற்றி வாழ்க்கையில் ஒவ்வொரு படியாக முன்னேறினால் நிலைத்த வெற்றி அமைவது உறுதி என்னும் நம்பிக்கை.

மணமக்கள் வீட்டுக்குள் நுழையும் போது ஏன் வலக்காலை எடுத்து வரச் சொல்கிறார்கள் என்பதற்கு கவியரசு கண்ணதாசன் அவர்கள் விளக்கம்

*மணவறையைச் சுற்றி ஏன் வலம் வருகிறார்கள்?*
*ஊர்வலம் வருவது என்று ஏன் கூறுகிறார்கள்?*
*எல்லாமே வலப்புறம் நோக்கம் என்ன?*

காரணம், பூமியே வலப்புறமாகச் சுழல்கிறது என்பதுதான்.

மனிதன் இரண்டு கால்களில் இரண்டு கைகளில் இடது கால் கைகளைவிட, வலது கால் கைகள் பலம் வாய்ந்தவை.

"சக்தியோடு வாழ்" நிரந்தரமாக எதிலும் வலப்புறமாக வருவது நன்று' என இந்துக்கள் நம்பினார்கள், நம்புகிறார்கள்.

'வலம்' என்பது 'நாம் வலிமையடைவோம்' என்றும் பொருள் தருகிறது.

வலியோம், வல்லோம், வல்லம், வலம்.

இந்த நான்கு வார்த்தைகளும் ஒரே பொருள் உடையவை.

தனது வலிமையின் மீது நம்பிக்கை வைத்து வாழ்வதற்கே வலது காலை முதலில் எடுத்து வைக்கச் சொன்னார்கள் இந்துக்கள்" (12).

இறைவன் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருந்தாலும் புனிதமான குத்துவிளக்கு தீபத்தில் கொழுந்து விட்டு பிரகாசிக்கிறான் என்பது இந்துக்கள் நம்பிக்கை.

எனவே வீட்டிற்குள் வந்ததும் மணப்பெண்ணை குத்துவிளக்கினை ஏற்றி வைக்கச் சொல்லுவர். அப்பெண் அந்த இல்லத்தில் இல்லக விளக்காக இருந்து தீப ஒளி

பிரகாசமாக விளங்குவது போல இல்லத்தை எப்போதும் பிரகாசமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்ற நம்பிக்கையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

## மறுசரடு மாற்றுதல், சிறுநூல் அணிதல்

மணமக்கள் நீராடி புத்தாடை அணிந்துகொள்வார்கள். மணப்பெண்ணை பொங்கல் வைக்கச் செய்வர். பொங்கல் பொங்கி வரும்போது

*"பஞ்சம் பறக்க என்று இன்பம் சுரக்க என்று*
*பழமை மடிக என்று பொங்குக பொங்கல்*
*புதுமை மணக்க என்று பொங்குக பொங்கல்"*

என்று கூடியுள்ளோர் சொல்வது நல்லது.

விநாயகப் பெருமான் கோயிலுக்குச் சென்று பொங்கல் மற்றும் மறுசரடு நூல்களை வைத்து தீபாராதனை காட்டி வழிபாடு செய்தபின் சிறுநூலை மணமகளின் கழுத்தில் மணமகன் கட்டுவர். அதன்பின் திருமாங்கல்யத்தில் உள்ள சரடிற்கு வேறு சரடு மாற்றுவார்கள்

சுமங்கலிப் பெண்கள் கழுத்தில் எப்போதும் மங்கல நாண் மணவணி இருக்க வேண்டும் என்ற ஐதீகத்தில் நம் குலப் பெண்கள் சிறு சரடு அணிந்து கொள்கிறார்கள்.

## சாந்தி முகூர்த்தம்

மானிட வாழ்வில் 'சந்ததியாகிய நூல் அறுந்து விடாமல்' இருப்பதற்கு மக்கட்பேறு இன்றியமையாதது. புதல்வன் குடியை விளங்கச் செய்வதால் குடி விளக்காகிய புதல்வனைப் பெற்ற புகழ்மிக்க சிறப்பினையுடைய நற்றாய் என புலவர் மருதன் இளநாகனார் அகநானூற்றிலும், இல்வாழ் மகளிர்க்கு நற்பண்பு மங்கலம் எனவும், நன் மக்கட்பேறு அணிகலன் என திருவள்ளுவர் இல்லறத்தில் நன்மக்களின் இன்றியமையாமையை குறிப்பால் உணர்த்தியுள்ளனர்.

"கடவுட் கற்பொடு குடிக்கு விளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டிக் கன்றியும் எனக்கும்
இனிதா கின்றால் சிறக்கநின் ஆயுள்" (அகநானூறு 184:1-4)

மங்கலம் என்ப மனைமாட்சி மற்று அதன் (குறள் 60)
நன்கலம் நன்மக்கட் பேறு

(இல்லறத்தின் இரு ஒளி விளக்குகள் (1) இல்லக விளக்கு - இல்லத்தரசி 'மனைவி' (2) குடிக்குவிளக்கு - குலவிளக்கு 'நன்மக்கள்') திருமணமான ஆணும் பெண்ணும் இல்வாழ்வில் கூடி மகிழ்ந்து புலனின்ப நுகர்ச்சியால் பெறுவது மக்கட்பேறாகும். இது இயற்கையின் நியதி.

திருமண நிகழ்ச்சிகள் இனிதே நிறைவடைந்த பின் பெற்றோர்கள் ஒரு நல்ல நாளை தெரிவு செய்வார்கள். அந்த நாள் இரவில் ஒரு நல்ல நேரத்தில் மணமக்களை நன்கு

அலங்கரித்து சுற்றம் சூழ்ந்து 'பெரிய மனைக் கிழத்தி ஆவாய்' என மணப்பெண்ணை வாழ்த்தி தனி அறைக்கு 'இலைமறைவு, காய்மறைவு' என்னும் பழமொழிக்கிணங்க மணமக்கள் கூட்டுவிக்க அனுப்பி வைப்பார்கள்

*வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்*
*கல்லென சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து*
*பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர*
*ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்* (அகம் 86:17-20)

இந்த நிகழ்ச்சி 'சாந்தி முகூர்த்தம்'. முதலிரவு என்று கூறுவர்.

இன்புறுதலாகிய ஆர்வம் உள்ளத்து மென்மேலும் மிக்க பெருகியிருந்த உணர்வில் மணமக்கள் இரு உள்ளங்களும் ஒன்றுபட்டு இருந்தபோதும் யார் எவ்வாறு முதலில் பேச்சைத் துவங்குவது என்று காத்து நிற்கும் இருவரின் செயலானது எவ்வாறெனின் மன்னர் இருவரின் படை இரண்டும் நெடும் போருக்குப்பின் பகையை ஒழித்து ஒன்றுபட்டு போவதற்கு மனம் இசைந்தும் முதலில் யார் உடன்படுவது என எண்ணி திகைப்புற்று நின்ற நிலைபோலிருந்தது என உவமையாக 'கரும்பிள்ளை பூதனாரின்' பரிபாடல் 10: 56-62 வரிகள் நம் நினைவிற்கு வருகிறது. இவ்வாறு பேசா மடந்தைகளாக இருந்தால் காலந்தான் வீணே கழியும் என எண்ணினான். பெண்கள் நாண உணர்வு மிக்கவர்கள். அவர்கள் தங்கள் இன்ப உணர்வை விரைவில் வெளிப்படுத்த மாட்டார்கள். தன் துணைவி புத்தாடையால் உடல் முழுதும் போர்த்தியிருந்ததைக் கண்டான். மிக்க புழுக்கத்தால் உனது நெற்றியில் அரும்பிய வியர்வையை நீக்க காற்றுப்புக சிறிது பொழுதாவது திறவாய் என நயத்துடன் கூறி போர்வையை நீக்க, அவள் உருவம் வெளிப்பட்டு விளங்க, மறையும் வகை அறியாதவளாய், மறைத்தற்குரிய உருப்புகளை மறைத்து, விரைவாக நாணி விருப்புற்று இணங்கினாள் என முதல் நாள் இரவில் தன் செயலை பின்னொரு நாளில் தலைவன் நினைத்ததாக வெளிப்படுத்தியுள்ளார் புலவர். விற்றூற்று மூதெயினனார்.

*"தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்*
*உவர் நீங்கு கற்பின் எம் உயிருடம்பு அடுவி*
*முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்*
*பெரும்புழுக்கு உற்றநின் பிறைநுதல் பொறிவியர்*
*உறுவளி ஆற்றச் சிறுவரை திறவென*
*ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்*
*உறைகழி வாளின் உருபெயர்ந் திமைப்ப*
*மறைதிறன் அறியா ளாகி ஒய்யென*
*நாணினள் இறைஞ்சி யோளே................"*

(அகம் 136: 8-26)

'காதல் சிறகை காற்றினில் விரித்து வானவீதியில் பறக்கவா', 'காலங்களில் அவள் வசந்தம் கலைகளிலே அவள் ஓவியம்' என்னும் கவியரசு கண்ணதாசன் அவர்கள் பாடல் வரிகளின் இன்ப உணர்வில் மிதந்து கொண்டிருக்கும் நிலையில்

உள்ளவர்களுக்கு ஆசையைத் துறந்து விடு என்று கூறுவது பயனற்றது. அது தேவையில்லாததும் ஆகும். ஆனால் குடும்ப வாழ்க்கையில் நுழைந்த பின் சமூக வாழ்க்கையிலும் பொருளாதாரத்திலும் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளினால் நாளாக நாளாக உணர்ந்து கொள்ள இயலும்.

அறிவியல் வளர்ச்சியடைந்துள்ள இக்காலகட்டத்தில் ஆண் பெண் இருபாலரும் பாலுணர்வைப் பற்றி ஓரளவு அறிந்துள்ளனர். ஆகையால் அதிக விளக்கம் தேவையற்றதெனக் கருதப்படுகிறது. புலன்களின் தன்மை இன்பத்தை நாடுவதுதான். இன்பத்திற்கு எல்லை இல்லை. ஒருவன் விரும்பியதை அனுபவித்து விடுவதனால் அவனுடைய ஆசை அடங்குவதில்லை. எவ்வாறெனில் கொழுந்து விட்டு எரியும் தீயில் நெய்யை விடும்போது அந்தத் தீ அணைந்து விடுவதில்லை. மேலும் கொழுந்து விட்டு எரிகிறது. அதுபோல அனுபவித்தது போதும் என்ற திருப்தி புலன்களுக்கு ஏற்படாது. ஏனெனில் அதுதான் புலன்களின் இயல்பு. அனுபவித்தால் தீராது ஆசை என்பதற்கு எடுத்துக்காட்டாக (மகாபாரதத்தில்) யயாதி மன்னன் வரலாறை நினைவு கொள்ளலாம்.

படகு நீரில் இருக்கலாம். ஆனால் நீர் படகுக்குள் நுழையலாகாது. அங்ஙனம் மனிதன் உலகில் வாழலாம். ஆனால் உலக ஆசை அவன் உள்ளத்தில் புகுந்துவிடலாகாது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் உபதேசம். (13)

அலையும் தன்மையுடைய மனதை பயிற்சியாலும் வைராக்கியத்தாலும் அதை அடக்கலாம் என கண்ணன் கீதையில் அர்ச்சுனனுக்கு சொல்லியுள்ளார்.

"தடந்தோளாய்! மனம் கட்டுப்படாதது. அலையும் தன்மையது என்பதில் ஐயமில்லை எனினும் குந்தியின் மைந்தா, அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் அதை அடக்கலாம். (பகவத்கீதை 6: 35)

ஆகையால் புலனின்ப நுகர்ச்சியை ஓரளவு கட்டுக்குள் வைத்துக் கொள்ள பழகிக் கொண்டால் இல்லற வாழ்க்கை சுகம் பெறும் என்பதில் ஐயமில்லை.

## முடிவுரை

பெற்று வளர்த்து ஆளாக்கிய பிறந்த வீட்டு உறவுகளை எல்லாம் துறந்து விட்டு முன்னறிமுகம் இல்லாத புதிய (புகுந்த) வீட்டில் காலடி வைப்பது பெண்மைக்கே உரிய மாண்பு.

மழைத்துளி விழும் நிலத்து இயல்புக்கு ஏற்ப மாறி அந்த மண்ணின் தன்மைகளையும் தன்னகத்தே ஏற்றுக் கொண்டு சிறப்புச் செய்கிற மாதிரி ஒரு பெண் தன் கணவன் வீட்டை அடைந்தவுடனேயே அந்த வீட்டை தன் வீடாகக் கருதி முழுமையாக ஏற்றுக் கொண்டு தான் பிறந்த வீட்டை முக்கியமாகக் கருதாத நிலைக்கு வந்து விட வேண்டும். கணவன் குலத்தை தன்னுடைய குலமாக ஏற்றுக் கொண்டு அவர்கள் குலதெய்வ வழிபாட்டுக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.

பொதுவாகவே, பெண்களில் சிலர் மனம் பிறந்த வீட்டுக்கும் புகுந்த வீட்டுக்கும் நடுவில் அல்லாடும். ஆனால் நடைமுறை வாழ்க்கைக்கு உகந்தது பெண்கள் மனதில் புகுந்த வீட்டுக்குத்தான் அதிக முக்கியத்துவம் இருக்க வேண்டும். சங்ககால சான்றுகள் சில :

மெல்லியதாய் நரைத்த கூந்தலையுடைய செவிலித்தாய் சிற்றில் விளையாட்டுடைய செல்வக்குடிப் பெண்ணை பேணிவந்தாள்; நல்ல சுவையுடைய பால் உணவை பொற்கலத்திலிட்டு அதனை ஒரு கையில் ஏந்தியும், பூப்போன்ற சிறிய கோலை மறு கையிலும் வைத்துக் கொண்டு 'உண்ண வாராய்' என விளித்தாள். அப்பெண்ணோ இங்கும் அங்கும் ஓடி விளையாட்டுக் காட்டியும், செவிலித்தாய் தன்னைத் தொடர்ந்து வந்து பற்ற முடியாமல் இருக்க முல்லை, மல்லிகை படர்ந்த பந்தலினுள் புகுந்து கொண்டு 'நான் உண்ண மாட்டேன்' என பிடிவாதம் பிடித்து வந்தாள் என்பது பிறந்த வீட்டில் அப் பெண்ணின் நிலை. அந்த செல்வக் குடி பெண்ணை ஏழ்மை நிலையிலுள்ள ஒருவனுக்கு திருமணம் செய்து வைத்தனர்.

திருமணமான பின் பெற்றோர் கணவனுடன் தம் மகளை கணவன் வீட்டுக்கு அனுப்பி வைத்தனர். புகுந்த வீட்டில் தம் மகளின் இல்வாழ்க்கையை தெரிந்து கொள்ளும் ஆர்வம் எந்தத் தாயிக்கும் இருக்கும். அதனினும் செல்வக்குடித் தாயிக்குச் சொல்லவும் வேண்டுமா! எனவே தம் மகளின் நிலையினை அறிந்து வருமாறு செவிலித்தாயினைப் பணித்தாள்.

ஒரு பொழுது உணவு இருந்தால் மறு பொழுது உண்ண உணவு இல்லாத அந்த இல்லத்தின் ஏழ்மை நிலையினையும், இருக்கும் உணவை தன் கணவன் உண்டபின் மிகுந்த உணவை அம் மகள் உண்டு வருவதையும் செவிலித்தாய் கண்டாள். தான் கண்டதை கண்டபடியே நற்றாயிடம் உரைத்தாள்.

பெற்றவர்கள் வீட்டில் சிற்றில் விளையாட்டிலும், பாலும் சோறும் உண்ண மறுத்த தம் மகளின் முந்தைய வளமான செல்வ வாழ்வையும், தன் கணவனின் ஏழ்மை நிலையும், அந்த நிலைக்கேற்ப வாழும் இன்றைய நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து தம் மகளின் அறிவையும் ஆற்றலையும் மனத்திண்மையும் மூக்கின் மேல் விரல் வைத்து வியந்தாள் என்கிறது பாடல். அந்த நற்றாயின் செல்வக் குடியினையும், புகுந்த வீட்டில் தம் மகளின் இல்வாழ்க்கையினையும் புலவர் போதனார் விவரிக்கும் பாங்கினைக் காண்போம்.

*'பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்*
*விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்*
*புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்*
*உண்ணென்று ஓக்குபு புடைப்பத் தெண்ணீர்*
*முத்தரிப் பொன்சிலம்பு ஒலிப்பத தத்துற்று*
*அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்*
*பரிமெலிந் தொழியப் பந்தர் ஓடி*
*ஏவல் மறுக்குஞ் சிறு விளையாட்டி*

*அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள் கொல்*
*கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்*
*ஒழுகு நீர் நுணங்கறல் போலப்*
*பொழுது மறுத்து உண்ணுந் சிறுமது கையளே*

(நற்றிணை 110)

செல்வக் குடியில் பிறந்த பெண்ணானாலும், சாதாரணக் குடும்பத்தில பிறந்தவளாய் இருந்தாலும் புகுந்த வீட்டின் சூழ்நிலைக்கு ஏற்றவாறு தங்களை அமைத்துக் கொண்டு அந்த வாழ்க்கையை விரும்பி இல்லறம் சிறக்க வாழ்கிறார்கள். இல்வாழ்க்கைக்கு பொருளாதாரம் தேவை. ஆனால் அது தான் அடிப்படை எனும் எண்ணம் கொள்ளத் தேவையில்லை. அன்பைப் போற்றி வாழ்வதே வாழ்க்கையாகும். என்பதை நாம உணர்ந்துகொள்ளுகிறோம்.

திருமணம் இனிது நிறைவடைந்த பின் தம் மகளை மணமகன் இல்லத்திற்கு அனுப்பி வைத்தனர். பாலும் சோறும் உண்ணச் சொல்லும் பொழுதெல்லாம வேண்டாமென அடம் பிடித்து விளையாடிக் கொண்டிருந்த மகளின் இலலற வாழ்க்கையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினாள். தாய். தானே சென்று காண்பதைவிட இன்னொருவர் கண்டு சொல்வது வியக்க வேண்டிய செய்திகளை வியந்தும், விளக்க வேண்டிய செய்திகளை விளக்கியும் சொல்வதற்கு வாய்ப்பளிக்கும் எனக் கருதிய தாய், தம் மகளின் தோழியை அனுப்பி வைத்தாள். தன் கணவனுக்கு உணவு சமைப்பதில் கருத்தாக தன் தோழி அட்டிலறையில் இருப்பதைக் கண்டாள். தன் கணவன் மேலுள்ள அன்பு மிகுதியால் பிறர் சமையல் செய்வதை விரும்பாது தானே, புளிக் குழம்பிற்கு ஏற்ற முற்றும் புளித்த தயிரைப் பிசைந்த தன் மெல்லிய விரல்களைத் துடைத்துக் கொண்ட ஆடையை மாற்ற நினையாமலும். புளிக்குழம்பினைத் தாளிதம் செய்யும் போது, குவளை மலரைப் போன்று விளங்கும் மை தீட்டிய தன் கண்களில் நிறைந்த தாளிதப் புகையைத் துடைத்துக் கொண்டிருந்தால். காலம் நீண்டு புளிக்குழம்பு சுவை குன்றி விடுமோ எனக் கருதி கண்களையும் துடையாமல் புளிக் குழம்பினைச் சமைத்தாள். தான் சமைத்த புளிக் குழம்பினை தன் கணவனுக்கு அளித்து சாப்பிடுவதை கண்டு மகிழ்ந்தாள்.

அந்தக் கணவனும் அட்டிலறைப் புகை படிந்த கண்களையும், அழுக்குப் படிந்த உடையையும் மாற்ற மறந்து தன் மனைவி ஆக்கிப் படைத்த புளிக் குழம்பினை 'இனிது' எனப் பாராட்டி உண்டான். புதுமண வாழ்வில் தன்னை அழகுபடுத்திக் கொள்வதையும் மறந்து, தன் கணவனுக்கு உணவு அளிப்பதிலே கவனம் செலுத்தும் மனைவியது மனப்பாங்கையும், கணவனும், மனைவியும் நடத்தும் இல்லறத்தைக் கண்டு மகிழ்வுற்ற தோழி தான் கண்டதை கண்டபடியே நற்றாயிடம் கூறுவதாக அமைந்துள்ள புலவர் பெருந்தகை 'கூடலூர் கிழார்' குறுந்தொகை பாடல்:

*"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுவுறு கலிங்கம், கழா அது உடீஇ.*

*குவளை உண்கள் குய்ப்புகை கழுமத்*
*தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்*
*'இனிது' எனக் கணவன் உண்டலின்,*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே!*

(குறுந்தொகை 167)

புகுந்த வீட்டில் தன் மகள் நடத்தும் இல்லற வாழ்க்கையை அறிந்து கொள்ளும் தாயின் ஆர்வமுடைமையும், கணவன் நலம் பெரிதென மனைவி கருதுவதும் மனைவியின் நலத்தையே கணவன் பெரிதும் விரும்புவதும் இயல்பு. இல்லறம் சிறப்புற இவை வேண்டத்தக்கதாகும்.

குளிர் காலத்தின் குளிர் மிகுதியால் புறாக்கள் தங்கள் கூண்டுகளிலிருந்து வெளியே சென்று இரையைத் தேட இயலவில்லை. குளிரின் கடுமையால் கால்கள் கடுகடுத்தன. எனவே, கடுகடுத்த காலைத் தூக்கி மற்றொரு காலை ஊன்றி ஒன்றோடு ஒன்று பிரியாத நிலையில் நின்றன. புறாக்களின் உடல் நெருக்கத்தால் இருபுறாவுக்கும் ஒரு பக்கம் குளிர் நீங்கி வெதுவெதுப்பு உண்டாகியது. மறுபக்கம் குளிர் நீங்க வேண்டி தலை மாறி நின்றுள்ளன.

இரையைத் தேட இயலாமல் பசியால் வாடும் போதும் ஒன்றையொன்று பிரியாமல் ஒன்றோடு ஒன்று இணைந்து இருந்து அப்பசியை மறந்து வாழும் புறாக்களின் அன்பு வாழ்க்கைச் சிறப்பை விவரிக்கிறது பத்துப் பாட்டு நூல்களில் ஒன்றான 'நெடுநல் வாடை' புள்ளினங்களான புறாக்கள் துன்பத்திலும், இணை பிரியாமல் வாழும் சிறப்பை நோக்கின் ஆறறிவு படைத்த மாந்தரின் வாழ்வு எத்தகு உயர்ந்த நிலையில் அமைய வேண்டும் எனக் கருதி இல்வாழ்க்கையில் வரும் இன்ப துன்பங்களை கணவன் மனைவி இருவரும் எவ்வித சலனமும் இன்றி பகிர்ந்து வாழ்ந்தால் குடும்பத்தில் அமைதியும் ஆனந்தமும் நிலவும் என்பதில் ஐயமில்லை.

இம்மை வாழ்க்கையின் செம்மை நெறியை விளக்குவது 'நெடுநல்வாடை' மறுமை வாழ்க்கையின் மாசறு நெறியை விளக்குவது 'திருமுறுகாற்றுப் படை' என வித்வான் செ.வேங்கடராம செட்டியார் அவர்கள் புனையா ஓவியம் (நெடுநல்வாடை விளக்கம்) குறிப்பிட்டுள்ளார். இந்த இரண்டு படைப்புக்களையும் நமக்கு அருளியவர் நக்கீரர் புறாக்களின் காட்சியை கருத்தோடு நோக்கிக் கண்டு நமக்கு அவர் காட்டும் காட்சி

*இன்புறு பெடையொடு மன்று தேர்ந் துண்ணாது*
*இரவும் பகலும் மயங்கிக் கையற்று*
*மதலைப் பள்ளி மாறுவன இருப்ப* (நெடுநல்வாடை 45-48)

கணவன் வீட்டுக்கு வந்த பெண்ணிற்கும் கணவன் வீட்டார் அன்பும் ஆதரவுடன் இருக்க வேண்டிய அவசியம் பற்றி 'அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி' அவர்கள் அறிவுரை.

"நம் நாட்டின் பண்பாட்டின்படி பார்த்தால் பெண்கள் இயற்கையிலேயே தியாகிகள் என்று சொல்லாம். ஏன் என்றால் அவர்கள் கணவன் வீட்டுக்கு வரும்போதே தாய், தந்தை, பிறந்த வீட்டுச் சூழ்நிலை எல்லாவற்றையும் துறந்துவிட்டுத்தான் வருகிறார்கள் திருமண வாழ்க்கையைத் தொடங்குவதற்கு முன்பே துறந்து வரக்கூடிய இயல்பு அவர்களுக்கு வந்து விடுகிறது. அந்த அளவுக்கு துறந்த பிறகு இங்கே அன்பை நாட வேண்டியது அவசியம். ஆதரவு கொடுக்க வேண்டியது அவசியம் ஆகிறது சேர்ந்த இடத்திலே இந்த ஒரு பெரிய உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டியது ஆண்மக்களுடைய கடமையாம். சாதாரணமாக ஒரு மனைவி என்ற மதிப்பில் மாத்திரம் வேண்டியது அல்ல. பெண்மை என்ற மதிப்பிலே, தாய்மை என்ற மதிப்பிலே எல்லோருக்கும் கொடுக்க கூடிய மதிப்பைப் போல நம் வீட்டுக்கும் வந்த பெண்ணிற்கும் கூட அந்த மதிப்பு உண்டு என்று பார்த்து நடந்து கொள்ளலாம் அல்லவா? (7)

திருமணத்துக்கு முன், திருமணத்துக்குப் பின் மனைவி மக்களுடன் இல்லறத்தில் வாழ்க்கை நடத்திவரும் போது ஒரு ஆண் மகனின் அன்பு எவ்வாறெல்லாம் விரிவடைந்து வருகிறதென்பதை அருணகிரிநாத பெருமான் அருளிச்செய்த 'கந்தர் அலங்காரம்' விரிவுரையில் முதுபெரும் தமிழறிஞர் திரு.கி.வா.ஜ. அவர்கள் விளக்கம் வருமாறு

"ஒரு பிரமச்சாரி கடைக்குப் போய் ஒரு மாம்பழம் வாங்குகிறான். அதை நறுக்கித் தா என்று கடைக்காரனைக் கேட்டு, அவன் நறுக்கிக் கொடுக்க, கடைவாயிலிலேயே நின்று அந்த மாம்பழத்தைத் தின்றுவிட்டுப் போகிறான். கல்யாணம் ஆன பிறகு அதே கடைக்குப் போய் ஒரு மாம்பழம் வாங்குகிறான். வாங்குகிற மாம்பழத்தை, நறுக்கித் தரச் சொல்லி அவனே உண்பது வழக்கமாதலால், அன்றைக்கும் கடைக்காரன் அந்த மாம்பழத்தை நறுக்க முந்துகிறான். "அப்பா, அதை நறுக்காதே" என்று சொல்லி மாம்பழத்தை முழுதாகவே வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போகிறான் இளைஞன் ஏன் தெரியுமா? முன்பு அந்த மாம்பழத்தை வாங்கும் போது அவனுக்குத் தன்னைப் பற்றிய நினைவு மாத்திரம் இருந்தது. இன்றைக்கோ தன் மனைவிக்கும் அந்த மாம்பழத்தை நறுக்கிக் கொடுக்க வேண்டுமென்ற அன்பு பிறந்து விட்டது. முன்பு அவனுக்கு ஒரு வயிறுதான். இன்றைக்கு மனைவியின்மேல் அன்பு மனத்தில் பிறந்ததனால், வயிறும் இரண்டாக விரிகிறது. ஒரு குழந்தையும் பிறந்து விட்டால் வயிறு மூன்றாகிறது. இப்படி அன்பு விரிய விரிய, மனமும் விரிவடைகிறது. தன்னலம் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து போகிறது. எல்லா உயிரையும் தன்னுயிர் போலக் காண்கின்ற நிலை வருகிறது.

இல்லறத்தில் வாழ்கின்ற ஒருவன் அன்பு நீரை ஊற்றிக் கொண்டே இருந்ததால் சுயநலம் என்பது வர வர மறைந்து கடைசியில் உள்ளமெல்லாம் அன்பு வெள்ளமாகும். தன்னலமே அற்றவனாகப் போய்விடுவான். முதலில் மனைவியிடம் பிறந்த அன்பு விரிந்து குழந்தையிடமும் பின்பு வீட்டிலுள்ளவரிடமும் பரவுகிறது. வீட்டிலிருந்து வீதிக்கு விரிகிறது. வீதியிலிருந்து ஊருக்கும், ஊரிலிருந்து நாட்டுக்கும் விரிகிறது. கடைசியில் உலகமெல்லாம் விரிந்து அன்பாக ஆகிவிடுகின்றது. இப்படி அன்பு விரிந்து

கொண்டே போகப்போக அவனது அகங்காரம் மங்கி விடுகிறது. அவனை பற்றியிருந்த "யான், எனது" என்ற இரண்டு பற்றுக்களுக்கும் அன்புத் தண்ணீர் வி விட இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் கடைசியில் அன்பு மாத்திர தெளிவாகப் பரந்து நிற்கின்றது".

உள்ளத்தின் வளர்ச்சி என்பது 'நான்' எனத் தொடங்கி எனது குடும்பம், எனது சுற்றம், எனது ஊர், எனது வட்டம், எனது மாவட்டம், எனது மாநிலம், எனது நாடு உலகம் என்ற பண்பாடாகும் என்பதை எவ்வளவு அழகாக திரு. கி. வா. ஜ. அவர்கள் அமைத்துள்ளார்.

ஆண் பெண் இருவரும் உலகம் உய்ய கருத்தொருமித்து வாழ வேண்டும். குடும்ப வாழ்க்கையில் சிற்சில நேரங்களில் ஒருவருக்கொருவர்விட்டுக் கொடுத்து வாழ்வது இன்றியமையாதது. எடுத்துக்காட்டாக சங்க இலக்கியம் கலித் தொகையில் ஒரு காட்சி

ஒரு கானகம். நெடுதுயர்ந்த மரங்கள், பூந்தளிர்கள், பூக்கள் பூத்துக் குலுங்க நறுமண மணத்துடன் பொலிவுற்று விளங்கியது. சிற்றோடைகளில் நீர் வழிந்தோடிக் கொண்டும் நீர் நிலைகளில் நீர் நிரம்பியும் இருந்தன.

களிறுகளும், மான்களும் கூட்டங்கூட்டமாக நீராடி, உண்டு திரிந்து வாழ்ந்து வந்திருந்தன.இவ்வாறான இயற்கை இன்பச் சூழலுக்கு ஒரு காலத்தில் துன்பச் சூழல் வந்தது.

வான் மழை பொய்த்தது. எங்கும் வறட்சி. மரம் செடிகளில் பூக்கள் இல்லை. அவை காய்ந்து கோலும் குச்சியுமாகக் காணப்பட்டன. புல் தரைகள் காய்ந்து கருகி துயரக் காட்சியைக் காட்டின.

மழையின் சிறப்பை விவரித்த திருவள்ளுவர் அம்மழை பொய்த்தால் 'உலகத்தில் ஓரறிவாகிய பசும் புல்லின் தலையையும் காண முடியாது என்பதற்கு இணங்க காட்சியளித்தது அக்கானகம்

*விசும்பின் துளிவீழின் அல்லாமற் றாங்கே*
*பசும்புல் தலைகாண்பு அரிது* (குறள் 1

வறட்சியின் கோரப் பிடியிலிருந்து காட்டில் வாழும் விலங்குகளும் தப்ப முடியவில்லை.

உண்ணப் பசுந் தளைகளும், செடி கொடிகளும் நீர் அருந்த நீர் நிலைகளில் நீர் இல்லாததால் கூடி வாழ்ந்து கொண்டிருந்த விலங்குகளும் பிரிந்து தங்களது உயிரைக் காத்துக் கொள்ள கானகத்தின் பல பகுதிகளுக்குச் சென்று விட்டன. அவ்வாறு பிரிந்த

சென்றதில் ஆண் யானை பெண் யானை மற்றும் அவற்றின் இளங்களிறுகளும் அடங்கும். வனத்தில் நீர் நிலைகளைத் தேடி களிறுகள் அங்கும் இங்கும் அலைந்தன. வெப்பமோ மிகுதியாய் எரிக்கின்றது. வறட்சியால் களிறுகள் நீர் வேட்கை மிகுந்து களைத்தும் போயின.

இந்நிலையில் தொலையில் ஓர்இடத்தில் நீர் நிலை இருப்பது களிறுகளின் கண்களுக்குத் தெறிந்தன. விரைந்து அவ்விடத்தை அடைந்தன. அங்கு காணப்பட்டதோ சேறும் சகதியுடன் கூடிய சிறிதளவு தண்ணீர்

யானைக் கன்றுகள் தன் தாயும் தந்தையும் நீர் உண்ண வேண்டுமென்று கருதாது தண்ணீரைக் கண்ட மகிழ்ச்சியில் நீர் நிலையில் இறங்கி நீரினைக் கலக்கி செந் நீராக்கின. இருப்பதோ சிறிதளவு தண்ணீர். அதுவும் கலங்கிய செந்நீர். யானைகள் இரண்டுக்கும் போதுமானதாக இல்லை. ஆண் யானை பெண்யானை பருகட்டும் எனவும், பெண் யானையோ ஆண் யானை முதலில் பருகட்டும் எனவும் ஒன்றை ஒன்று ஏக்கத்தில் முகத்தை முகத்தை பார்த்துக் கொண்டிருந்தன.

இவ்வாறே இருந்தால் நீர்வேட்கை இன்னும் அதிகமாகும் எனக் கருதிய ஆண் யானை தான் நீர் பருகினாலான்றி பெண்யானை பருகாது எனக் கருதி தன் துதிக்கையை வைத்து தண்ணீர் பருகுவது போல பாசாங்கு செய்தது. அதைக்கண்ட பெண்யானை ஆண் யானை தண்ணீர் பருகுகிறது என எண்ணி நீர் அருந்தி நீர் வேட்கையைத் தணித்துக் கொண்டது பெண் யானையை முன் குடிக்கச் செய்து எஞ்சியதை பின் குடிக்கும் அன்புடையது ஆண்யானை என்கிறது கலித்தொகை பாடல்:

*............... வெம்மையாற்*
*கடியவே கனங்குழாஅய் காடென்றாரக்காட்டுட்*
*டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்*
*பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே*
(கலித்தொகை 11: 6-9)

ஒன்றிரண்டு குழந்தைகளே வீட்டுக்கு வீடு இருக்கும். இக்காலத்தில் உறவுகளை நேசிக்கும் பழக்கத்தை பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு சொல்லித்தர வேண்டும்.

வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் குடும்ப நிகழ்ச்சிகள் பலவற்றில் உறவினரோடு இணைந்து மகிழ்வதை இன்றியமையாததாக கொள்ளவேண்டும். தாத்தா, பாட்டி உள்ளிட்ட பிரிக்க முடியாத பிரிக்கக் கூடாத உறவுகளை குழந்தைகளுக்கு இளமை முதலே புரிய வைத்து அன்பு காட்டி அன்பைப் பெற பழக்கப் படுத்த வேண்டும். அப்போதுதான் இல்லங்கள் தோறும் உறவு மலர்கள் பூத்துக் குலுங்கி அன்பு மணம் வீசி இன்ப நிலையில் அமையும்.

## நிறைவு

மானிட வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நிலைகளில் பல்வேறு சடங்குகளை மக்கள் செய்து வருகின்றனர். சடங்குகளை செய்து வருவதால் வாழ்வு

சென்றதில் ஆண் யானை பெண் யானை மற்றும் அவற்றின் இளங்களிறுகளும் அடங்கும். வனத்தில் நீர் நிலைகளைத் தேடி களிறுகள் அங்கும் இங்கும் அலைந்தன. வெப்பமோ மிகுதியாய் எரிக்கின்றது. வறட்சியால் களிறுகள் நீர் வேட்கை மிகுந்து களைத்தும் போயின.

இந்நிலையில் தொலையில் ஓர்இடத்தில் நீர் நிலை இருப்பது களிறுகளின் கண்களுக்குத் தெறிந்தன. விரைந்து அவ்விடத்தை அடைந்தன. அங்கு காணப்பட்டதோ சேறும் சகதியுடன் கூடிய சிறிதளவு தண்ணீர்

யானைக் கன்றுகள் தன் தாயும் தந்தையும் நீர் உண்ண வேண்டுமென்று கருதாது தண்ணீரைக் கண்ட மகிழ்ச்சியில் நீர் நிலையில் இறங்கி நீரினைக் கலக்கி செந் நீராக்கின. இருப்பதோ சிறிதளவு தண்ணீர். அதுவும் கலங்கிய செந்நீர். யானைகள் இரண்டுக்கும் போதுமானதாக இல்லை. ஆண் யானை பெண்யானை பருகட்டும் எனவும், பெண் யானையோ ஆண் யானை முதலில் பருகட்டும் எனவும் ஒன்றை ஒன்று ஏக்கத்தில் முகத்தை முகத்தை பார்த்துக் கொண்டிருந்தன.

இவ்வாறே இருந்தால் நீர்வேட்கை இன்னும் அதிகமாகும் எனக் கருதிய ஆண் யானை தான் நீர் பருகினாலான்றி பெண்யானை பருகாது எனக் கருதி தன் துதிக்கையை வைத்து தண்ணீர் பருகுவது போல பாசாங்கு செய்தது. அதைக்கண்ட பெண்யானை ஆண் யானை தண்ணீர் பருகுகிறது என எண்ணி நீர் அருந்தி நீர் வேட்கையைத் தணித்துக் கொண்டது பெண் யானையை முன் குடிக்கச் செய்து எஞ்சியதை பின் குடிக்கும் அன்புடையது ஆண்யானை என்கிறது கலித்தொகை பாடல்:

*.............. வெம்மையாற்*
*கடியவே கனங்குழாஅய் காடென்றாரக்காட்டுட்*
*டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்*
*பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே*
(கலித்தொகை 11: 6-9)

ஒன்றிரண்டு குழந்தைகளே வீட்டுக்கு வீடு இருக்கும். இக்காலத்தில் உறவுகளை நேசிக்கும் பழக்கத்தை பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு சொல்லித்தர வேண்டும்.

வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் குடும்ப நிகழ்ச்சிகள் பலவற்றில் உறவினரோடு இணைந்து மகிழ்வதை இன்றியமையாததாக கொள்ளவேண்டும். தாத்தா. பாட்டி உள்ளிட்ட பிரிக்க முடியாத பிரிக்கக் கூடாத உறவுகளை குழந்தைகளுக்கு இளமை முதலே புரிய வைத்து அன்பு காட்டி அன்பைப் பெற பழக்கப் படுத்த வேண்டும். அப்போதுதான் இல்லங்கள் தோறும் உறவு மலர்கள் பூத்துக் குலுங்கி அன்பு மணம் வீசி இன்ப நிலையில் அமையும்.

## நிறைவு

மானிட வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நிலைகளில் பல்வேறு சடங்குகளை மக்கள் செய்து வருகின்றனர். சடங்குகளை செய்து வருவதால் வாழ்வு

வளமும் நலனும் பெறும் என்று நம்பிக்கையில் நிலைத்த மனிதன் நம்பிக்கை கொண்டு வருகிறான்.

" 'வாழ்க வளமுடன்" என்று சொல்லும் பொழுதே அந்த வார்த்தையிலே உள்ள கருத்தாழத்தை நினைத்துப் பாருங்கள். 'வாழ்க' என்று சொன்னாலே எல்லாம் பெற்று இனிதாக நீங்கள் வாழவேண்டும் என்ற பொருள் உள்ளடங்கியிருக்கிறது. 'வளமுடன்' என்று சேர்க்கும் பொழுது வாழ்க்கையிலே உங்களுக்குத் தேவையான எல்லாப்பேறுகளையும் பெற்று வாழ வேண்டும் என்று அமைகிறது. ஆதலினால் "வாழ்க வளமுடன்" என்று வாழ்த்துவது மிக்க வலுவுடைய, ஆழமான கருத்துடைய நல்ல ஒலியைப் பிறருக்குப் பாய்ச்சக் கூடிய ஒரு வார்த்தையாகும் (16) என்று அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்களின் அன்பும் ஆசிகள் கொண்ட சொல்லாகிய

*"வாழ்க வளமுடன்"*

என்று எழுதி நிறைவு செய்கிறோம்.

## குறிப்புகள்

1. துக்ளக் ஆசிரியர் 'சோ' அவர்களின் 'மகாபாரதம் பேசுகிறது' (ப. .1169-1170)
2. திரு. கி.வா.ஜ அவர்கள் 'கந்தவேள் கதையமுதம்' ப. 85,86
3. திரு. மு.மு. இஸ்மாயில் அவர்கள் "கம்பன் கண்ட இராமன்" (பக்கம் 114)
4. சிவஞான சித்தியார் - சுபக்கம். திரு. கு. வைத்தியநாதன் அவர்கள் தெளிவுரை (ப. 168.)
5. திரு. கோவைக் கிழார் அவர்கள் "கொங்கு நாட்டு வரலாறு" (பக்கம் 40)
6. திருவிளையாடல் புராணம் 'உக்கிர பாண்டியனுக்கு வேல் செண்டு கொடுத்த படலம்.' (பாடல் 48).
7. கவியரசு கண்ணதாசன் அவர்கள் 'அர்த்தமுள்ள இந்து மதம்' முதல் பாகம் பக்கம் 81.
8. திருவிளையாடல் புராணம் 'திருமணப் படலம்' பாடல் (185).
9. திரு. கி.வா.ஜ அவர்கள் 'கந்தவேள் கதையமுதம் (ப. 498)
10. 'சௌந்தர்ய லகரி' சுலோகம் 69. (ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லம், மயிலாப்பூர்)
11. துக்ளக் ஆசிரியர் 'சோ' அவர்கள் எங்கே பிராமணன்?' (ப. 218)
12. கவியரசு கண்ணதாசன் அவர்கள் 'அர்த்தமுள்ள இந்து மதம்'-முதல் பாகம் (பக்கம் 75)
13. ஸ்ரீமத் பகவத் கீதை - சுவாமி சித்பவானந்தர் அவர்கள் வியாக்கியானம் (ப. 144)
14. 'அருள்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் 'மனவளக்கலை' (ப. 224).
15. திரு. கி.வா.ஜ அவர்கள் ' கந்தர் அலங்காரம்' விளக்கவுரை - 'அலங்காரம்' (ப 5-6)
16. 'அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் 'மன வளக்கலை' (ப. 221).

வளமும் நலனும் பெறும் என்று நம்பிக்கையில் நிலைத்த மனிதன் நம்பிக்கை கொண்டு வருகிறான்.

" 'வாழ்க வளமுடன்" என்று சொல்லும் பொழுதே அந்த வார்த்தையிலே உள்ள கருத்தாழத்தை நினைத்துப் பாருங்கள். 'வாழ்க' என்று சொன்னாலே எல்லாம் பெற்று இனிதாக நீங்கள் வாழவேண்டும் என்ற பொருள் உள்ளடங்கியிருக்கிறது. 'வளமுடன்' என்று சேர்க்கும் பொழுது வாழ்க்கையிலே உங்களுக்குத் தேவையான எல்லாப்பேறுகளையும் பெற்று வாழ வேண்டும் என்று அமைகிறது. ஆதலினால் "வாழ்க வளமுடன்" என்று வாழ்த்துவது மிக்க வலுவுடைய, ஆழமான கருத்துடைய நல்ல ஒலியைப் பிறருக்குப் பாய்ச்சக் கூடிய ஒரு வார்த்தையாகும் (16) என்று அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்களின் அன்பும் ஆசிகள் கொண்ட சொல்லாகிய

*"வாழ்க வளமுடன்"*

என்று எழுதி நிறைவு செய்கிறோம்.

## குறிப்புகள்

1. துக்ளக் ஆசிரியர் 'சோ' அவர்களின் 'மகாபாரதம் பேசுகிறது' (ப. .1169-1170)
2. திரு. கி.வா.ஜ அவர்கள் 'கந்தவேள் கதையமுதம்' ப. 85,86
3. திரு. மு.மு. இஸ்மாயில் அவர்கள் "கம்பன் கண்ட இராமன்" (பக்கம் 114)
4. சிவஞான சித்தியார் - சுபக்கம். திரு. கு. வைத்தியநாதன் அவர்கள் தெளிவுரை (ப. 168.)
5. திரு. கோவைக் கிழார் அவர்கள் "கொங்கு நாட்டு வரலாறு" (பக்கம் 40)
6. திருவிளையாடல் புராணம் 'உக்கிர பாண்டியனுக்கு வேல் செண்டு கொடுத்த படலம்.' (பாடல் 48).
7. கவியரசு கண்ணதாசன் அவர்கள் 'அர்த்தமுள்ள இந்து மதம்' முதல் பாகம் பக்கம் 81.
8. திருவிளையாடல் புராணம் 'திருமணப் படலம்' பாடல் (185).
9. திரு. கி.வா.ஜ அவர்கள் 'கந்தவேள் கதையமுதம் (ப. 498)
10. 'சௌந்தர்ய லகரி' சுலோகம் 69. (ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லம், மயிலாப்பூர்)
11. துக்ளக் ஆசிரியர் 'சோ' அவர்கள் எங்கே பிராமணன்?' (ப. 218)
12. கவியரசு கண்ணதாசன் அவர்கள் 'அர்த்தமுள்ள இந்து மதம்'-முதல் பாகம் (பக்கம் 75)
13. ஸ்ரீமத் பகவத் கீதை - சுவாமி சித்பவானந்தர் அவர்கள் வியாக்கியானம் (ப. 144)
14. 'அருள்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் 'மனவளக்கலை' (ப. 224).
15. திரு. கி.வா.ஜ அவர்கள் ' கந்தர் அலங்காரம்' விளக்கவுரை - 'அலங்காரம்' (ப 5-6)
16. 'அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் 'மன வளக்கலை' (ப. 221).

# இணைப்பு

1. எட்டுவகை திருமணம்
2. கூட்டங்கள் (குலம்)
3. திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரம்
4. செங்குந்தர் மரபு - விளக்கம்
5. கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய மங்கல வாழ்த்து

கீழ்காணும் நூல்களிலிருந்து குறிப்புகள் எடுக்கப்பட்டுள்ளன.

| | நூல் | ஆசிரியர் / உரை ஆசிரியர் |
|---|---|---|
| 1. | அகநானூறு. களிற்றியானை | நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் |
| | மணிமிடை பவளம் | நாவலர். ந.மு. வேங்கடசாமி நாட்டார் |
| | நித்திலக் கோவை | புலியூர்க் கேசிகன் |
| 2. | அர்த்தமுள்ள இந்து மதம் | கவியரசு கண்ணதாசன் |
| 3. | எங்கே பிராமணன்? | துக்ளக் ஆசிரியர் 'சோ' |
| 4. | கந்த வேள் கதையமுதம் | கி.வா.ஜா . |
| 5. | கந்தர் அலங்காரம் - 'விளக்கவுரை | கி.வா.ஜா |
| 6. | கலித்தொகை | நச்சினார்க்கினியருரை |
| 7. | குறிஞ்சிப்பாட்டு (இலக்கிய திறனாய்வு விளக்கம்) | 'தமிழண்ணல்' |
| 8. | குறுந்தொகை | புலியூர்க் கேசிகன் |
| 9. | கொங்கு நாட்டு வரலாறு | கோவைக்கிழார் |
| 10. | கம்பன் கண்ட இராமன் | மு.மு.இஸ்மாயில் |
| 11. | சிலப்பதிகாரம் | பேராசிரியர்.ஜெ.ஸ்ரீசந்திரன் |
| 12. | சிவஞான சித்தியார் - சுபக்கம் | கு. வைத்தியநாதன் |
| 13. | 'சௌந்தர்ய லஹரி' | ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம். மைலாப்பூர். |
| 14. | தமிழ்க் காதல் | மூதறிஞர். செம்மல். வ.சுப. மாணிக்கம். |
| 15. | திருக்குறள் | டாக்டர். மு. வரதராசனார் |
| 16. | திருவிளையாடல் புராணம் | நாவலர்.ந.மு. வேங்கடசாமி நாட்டார் |
| 17. | நற்றிணை | பின்னத்தூர். அ. நாரயணசாமி ஐயர் |

| | | |
|---|---|---|
| 18. | நெடுநல்வாடை (புனையா ஓவியம்) | வித்வான். சே. வேங்கடராம செட்டியார் புலியூர்க் கேசிகன் |
| 19. | பரிபாடல் | சோ.ந. கந்தசாமி |
| 20. | பரிபாடல் காலம் | சுவாமி. சித்பவானந்தர். வியாக்கியானம் |
| 21. | ஸ்ரீமத் பகவத் கீதை | அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி |
| 22. | மனவளக் கலை | துக்ளக் ஆசிரியர் 'சோ' |
| 23. | மகாபாரதம் பேசுகிறது | |
| 24. | முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை | மறைந்த திரு.சுவாமி வேதாசலம் மறைமலையடிகள் |

# இணைப்பு-1

## எட்டுவகைத் திருமணங்கள்

(ஆதாரம் " உலக ரகசியம் " என்னும் "பிரபஞ்ச உற்பத்தி" சிறுமணவூர் திரு முனுசாமி முதலியார் அவர்கள் இயற்றியது.)

1. *பிரும மணம் :* மங்கைக்குரிய தாய்தந்தையோர் மருமகனின் தாய்தந்தையோர் அனுமதியில்லாமல் பிரமசாரியான மணாளனுக்கு ஓமாக்கினி முன்னிலையில் தத்தஞ்செய்து கொடுப்பது.

2. *பிரசாபத்திய மணம் :* கன்னிகையைப் பெற்றோரும் பிள்ளையைப் பெற்றோரும் மனமொருமித்து, பந்து மித்திரோடு மணம் முடிப்பது.

3. *ஆரிட மணம் :* பெண் வீட்டில் இரணடு எருதுகளைக் கொண்டுபோய் மாப்பிள்ளை வீடடார் கட்டிவைத்து வந்தவுடன் அவர்கள் எருதைப் பெற்றுக் கொண்டால், பெண் கொடுக்கிறோம் என்பதற்கு சாட்சியாக எண்ணி முருகனது தேவி வள்ளியென மங்கையை மனமாரக் கொடுக்கப்பெறுவது. அவ்வெருதை ஏற்றுக் கொள்ளாராயின் பெண்கொடுப்பதில்லை என்ற குறிப்பாம்.

4. *தெய்வ மணம் :* மணவாளனில்லாமல் மணாளன் காமோஷ்டியாகம் நடத்தி, பெண்ணை காருகமத்தியமென்னும் அக்கினிக்கு முன்பாக நிறுத்தி புத்திரவரத்திற் பிறந்த புதல்வனுக்குத் தத்தம் செய்வது.

5. *காந்தருவ மணம்:* மைந்தனும் மடந்தையும் ஒருவர் கொடுப்பதின்றியே ஒரு தனி இடத்தே சந்தித்து இருவரும் ஏகவைபோக மனமொத்து சித்தமுருகுவது.

6. *அசுர மணம் :* கன்னிகைக்கு தங்க பூடணங்களும் ஆடைகளும் அனுவித்து அன்னாதி பட்சணமும் அளித்து ஆசாபாசங்களை உண்டாக்கி பெண்ணின் தாய்க்குப் பொற்பணி, பொற்றூசு, பொற்காசு முதலியவைகளைக் கொடுத்து உபசரித்து பழக்கமமானபின் நயத்திருந்து வஞ்சத்தோடு மருவுவது.

7. *இராட்சச மணம்:* ஒருவன் ஒரு பெண்ணின்மேலிச்சை உண்டாகி விசாரிக்கும் போது பெண்ணும் பெண்ணின் தாய் தந்தையரும் சம்மதியாராயின், அக்கால் அப்பெண்ணை தந்திரவாதிகளால் வலிதிலெடுத்துச் சென்று மனரம்மிதமாகும்படி இன்சொற் பேசி பண்டு பலாதிகளைக் கொடுத்து மாலையணிந்து மணப்பது.

8. *பைசாச மணம் :* பெண்ணின் உற்றாரும் மற்றோரும் அறியாது பெண் மதிமயங்கிய காலத்தே மருவுவது .

(பிரபஞ்ச உற்பத்தி : மக்கள் காண்டம் (ப. 191-193).

## இணைப்பு - 2

## நம் செங்குந்தர் கைக்கோள முதலியார் சமூகத்தில் உள்ள **(கோத்திரங்கள்)** கூட்டங்கள் (குலம்)

நம் குலத்திலுள்ள கூட்டங்கள் ('அ' கர வரிசைப்படி எழுதப்பட்டுள்ளது)
இது முழுமையான பட்டியல் இல்லை

### I

1. அம்மணியம்மாள்கூட்டம்
2. ஆனந்தன் கூட்டம்
3. கணக்கன் கூட்டம்
4. கவுண்டக்காளி கூட்டம்
5. கள்ளக்கரையான் கூட்டம்
6. கொங்கக் கூட்டம்
7. கோனங் கூட்டம்
8. தடத்துக்காளி கூட்டம்
9. பட்டக்காரர் கூட்டம்
10. பட்டி கூட்டம்
11. புஞ்சைப் புளியான் கூட்டம்
12. புலவன் கூட்டம்
13. ராக்கிகூட்டம்

### II

1. ஆரங் கூட்டம்
2. கஞ்சிவேளங் கூட்டம்
3. காக்கா வாரணவாசி கூட்டம்
4. காஞ்சர்ங் கூட்டம்
5. செஞ்சி கூட்டம்
6. சொக்கங் கூட்டம்
7. தூங்கநாரி கூட்டம்
8. பச்சியாங் கூட்டம்
9. பரமகாளி கூட்டம்
10. பூந்துறையான் கூட்டம்
11. போக்கங் கூட்டம்
12. மணியடிசடையன் கூட்டம்
13. மண்ணையங் கூட்டம்
14. ராசி கூட்டம்

### iii

1. அரசுரான் கூட்டம்
2. அழகப்பன் கூட்டம்
3. ஆகாவழி கூட்டம்
4. ஆட்டுக்காரன் கூட்டம்
5. இலைப்புளியான் கூட்டம்
6. உதிரமலை கூட்டம்
7. எட்டிமரத்தான் கூட்டம்
8. தலைக்கடுப்பான் கூட்டம்
9. தெற்கத்தையன் கூட்டம்
10. நாராயணன் கூட்டம்
11. பூசாரி கூட்டம்
12. மாட்ராயன் கூட்டம்
13. மூப்பன் கூட்டம்
14. மொக்கையன் கூட்டம்
15. வெள்ள வழத்தான் கூட்டம்

### iv

1. 24 நாட்டுபட்டக்காரர்
3. வையாபுரி நாட்டு பட்டம்
5. 6 நாட்டு பட்டக்காரர்
7. பட்டம் சமயம்
9. பூசன் குலம்
11. பட்டாளியர் குலம்
13. கீரனூரார் குலம்

2. கருமாண வாத்தியார்
4. வாரக்க நாட்டு பட்டம்
6. கணேசர் பட்டம்
8. நல்லதம்பிரான்
10. பூசாரி குலம்
12. குன்னத்தூரார் குலம்
14. பட்டி குலம்

15. ஒகாயனூரார் குலம்
16. வேட்டி குலம்
17. அனந்த குலம்
18. சிவியூரார் குலம்
19. ராக்கி குலம்
20. கருவலூரார் குலம்
21. காசிவேலன் குலம்
22. பீமன் குலம்
23. பாசியூரார் குலம்
24. பொஞ்சி குலம்
25. ஊமத்தூரார் குலம்
26. கணக்கன் குலம்
27. சென்னி குலம்
28. செம்மோரை குலம்
29. செந்தேவன் குலம்
30. புலிக்குத்தி குலம்
31. சிறுவேங்கை குலம்
32. செம்பங்கருங்காளி குலம்
33. சாமக்குளத்தார் குலம்
34. குள்ளன் குலம்
35. மாகாளி குலம்
36. பெரிய குலம்
37. அன்னூரான் குலம்
38. அல்லாம் பழனி குலம்
39. பழனியூரார் குலம்
40. செல்லங் குலம்
41. உடையாங் குலம்
42. புகழூரார் குலம்
43. பெரியகுளத்தார் குலம்
44. அனந்தங்குலம்
45. முருக கூட்டம்
46. கருகாளியம்மன் குலம்
47. அறுபதாங்குடி குலம்
48. வீரக்குமார் குலம்
49. கட்ராயன் குலம்
50. அம்பலவாணர் குலம்
51. கானூரான் குலம்
52. அந்தியூரார் குலம்
53. பொன்தேவி குலம்
54. புலவனார் குலம்
55. நெய்க்காரங்கூட்டம்
56. கனியூரார் குலம்
57. பரமகாளி கூட்டம்
58. ராசி குலம்
59. புலவனார் குலம்
60. சிவன் குலம்
61. காஞ்சான் குலம்

**(IV : 1-61)**

நன்றி,

தலைவர், அருள் மிகு காமாட்சியம்மன் திருமண மண்டபம்,

திருப்பூர் - 4.



**நம் சமூகத்தில் உள்ள கூட்டம்(எ) கோத்திரங்களின் முழு பட்டியல் அறிய இந்த QR code ஐ scan செய்யவும்**

ன் : கொல்லி 3ம் திருமு...

ணணில் நல்ல வண்ணம் வாழ
ண்ணில் நல்ல கதிக்கு யாதுமே
ண்ணில் நல்லஃதுறும் கழுமல
ண்ணில் நல்லாளொடும் பெரு

பண்ணில் நல்லாளொடும் பெரு
ாதையார் பொற்கிண்ணத் தடிசி
தையார் முனிவுறத் தான் எனை
தையார் குழையினன் கழுமல வ
தையாள் அவளோடும் பெருந்த

தாண்டணை செய்தொழில் துயர் அ
ண்டணைக் கொன்றையான் மதுமல
ண் துணை நெற்றியான் கழுமல வள
பண்துணையாக ஓர் பெருந்தகை இரு

அயர்வுளோம் என்றுநீ அசைவு ஒழி நெ
யர்வளை முன்கையாள் நேரிழை அவ
யல்வயல் குதிகொளும் கழுமல வளநக
பெயர்பல துதிசெயப் பெருந்தகை இருந்

அடைவிலோம் என்றுநீ அயர்வொழி நெ
விடை அமர் கொடியினான் விண்ணவர் தொ
கடைஉயர் மாடமார் கழுமல வளநகர்ப்
பெடை நடை அவளொடும் பெருந்தகை இ

மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல் குல் திருந்தமிழை யவளொ
பெற்றெனை ஆளுடைப் பெருந்தகை இருந்த

குறைவளை அதுமொழி குறைவுஒழி நெஞ்சமே
நிறைவளை முன்கையாள் நேரிழை அவளொடு
கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை இருந்ததே

அரக்கனார் அருவரை எடுத்தவன் அலறிட
நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவாள் அருள் செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்கு நீர் அவளொடும் பெருந்தகை இருந்ததே

நெடியவன் பிரமனும் நினைப்பரிதாய் அவர்
அடியொடு முடியறியா அழல் உருவினன்
கடிகமழ் பொழில் அணி கழுமல வளநகர்ப்
பிடிநடை அவளொடும் பெருந்தகை இருந்ததே -9
தாருறு தட்டுடைச் சமணர் சாக்கியர்கள் தம்
ஆருறு சொற்களைந் தடியினை அடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை இருந்ததே -10
கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோடு இருந்த எம்பிரான்தனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவார் அவர்கள் போய் விண்ணுலகாள்வரே -11

# இணைப்பு -4

## செங்குந்தர் மரபு - விளக்கம்

தொகுத்தவர் : செ. தெட்சிணாமூர்த்தி

(ஆதாரம் : சென்னை செங்கை மாவட்ட செங்குந்த மகாசன சங்கம்
(15 வது ஆண்டு நினைவு விழா மலர் (173-178) 15.5.1988)

செங்குந்த குலத்தினர் கயிலாய மரபினராவர். நந்தி கணவமிசத்தவர் ; என்றும் உப சுப்பிரமணிய மரபினர் என்று கூறுவதுண்டு. 3ம் மரபினர் சிறப்புக்களை எல்லாம் பற்றி கந்தபுராணம், பிரமாண்ட புராணம், திருவாரூர் லீலை, ஏழாயிரப் பிரபந்தம், வல்லான் காவியம், ஈட்டி எழுபது போன்ற புராண வரலாற்று இலக்கியங்கள் விரிவாகக் கூறுகின்றன.

### செங்குந்தர்:

செங்குந்தர் என்னும் சொல்லுக்குச் செம்மை பொருந்திய குந்தப் படையுடையுவர் என்பது பொருளாகும். குந்தம் என்பதும் வேல் என்பதும் ஒன்றே.

### இறைவன் அருள்:

முன்னொரு காலத்தில் சிவபெருமான் உமாதேவியாரோடு கயிலாயத்தில் வீற்றிருந்தபோது சூரபன்மன், சிங்கமுகன், தாரகாசூரன் போன்ற அசுரர்கள் இழைத்த கொடுமைகளைத் தாங்கமாட்டாமல் அல்லற்பட்டு, ஆற்றாது திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் ஒருங்குகூடி அவரைக் காண வந்தனர். அவர்கள் எல்லாம் இறைவனை வணங்கி வாழ்த்தி, "எம்பெருமானே! நாங்கள் எல்லாம் சூரபன்மன் முதலிய அசுரர்கள் இழைத்துவரும் கொடுமைகளால் நாளும் வருந்துகின்றோம். இனி எங்கள் வருத்தமெல்லாம் தீர தேவரீர் அருளியவாறு ஒரு திருக்குமாரரை தந்தருள்க" என்று விண்ணப்பம் செய்தனர்.

சிவபெருமான் அவர்களை நோக்கி "நீவிர் இனி வருந்தாது ஒழிமின், யாம் ஒரு புதல்வனைத் தருவோம்" என்று திருவாய் மலர்ந்தருளி, தமது பழைய ஆறுமுகங்களைக் கொண்டு அத்திருமுகங்களின் நெற்றிக்கண் தோறும் ஒவ்வோர் தீப்பொறியைத் தோற்றுவித்தருள அவ்வாறும் தேவர்களும் நெருங்கவொண்ணா வெம்மையை உடையனவாய் உலகெங்கும் பரந்தன. அத்தீப்பொறிகளின் வெம்மையைக் கண்டு அவர் அருகில் வீற்றிருந்த உமாதேவியாரும் அஞ்சி, உளங்கலங்கி தமது திருக்கோயிலினுள்ளே ஓடினார். அவ்வாறு அவர் ஓடியபோது அவரது திருவடிகளை அணி செய்த சிலம்பின் மணிகள் ஒன்றோடொன்று மோதி ஒன்பது மணிகளைச் சிந்தின.

### முருகக் கடவுள் தோற்றம்:

சிவபெருமான் பின்னர் ஒரு திருமுகம் கொண்டு அந்த ஆறு தீப்பொறிகளையும்

அருகிலழைத்து வாயு தேவனையும், அக்கினி தேவனையும் நோக்கி "நீங்கள் இருவரும் இப்பொறிகளைக் கொண்டு போய்ச் சரவணப் பொய்கையில் சேர்ப்பீர்களாக" என்று பணித்தருள. வாயு தேவன் அவற்றின் வெம்மையைத் தாங்கஇயலாமையால் அக்கினி தேவனிடம் கொடுக்க அவனும் தாங்கமாட்டாமையால் கங்கையில் கொண்டுவிட கங்கை அவற்றைச் சரவண பொய்கையில் கொண்டு போய்சேர்த்தது அவ்வாறு பொறிகளும் ஆறு ஆண்குழந்தைகளாய்த் தாமரை மலர்களில் 'திருவவதாரம்' செய்தன. கார்த்திகை மகளிர் அறுவர் அக்குழந்தைகளைப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்தனர்.

## நவசக்திகள்:

முன் தீப்பொறிகளின் வெம்மைக்கு ஆற்றாது ஓடிய உமாதேவியார் மீண்டும் சிவபெருமான் முன்னர் வர. அவர் சிலம்பினின்றும் உதிர்ந்த நவரத்தினங்களிலும் அவரது திருவுருவம் தெரிய அவ்வுருவங்களைச் சிவபெருமான் "வாருங்கள்" என்றழைக்க ஒவ்வொரு ரத்தினத்தின்றும் ஒவ்வோர் சக்தியாக நவசக்திகள் தோன்றினார்கள். அந்நவசக்திகளும் பெருமானிடத்தே விருப்பம் வைத்தமையால், இருடிப் பத்தினிகளைப் போல அப்போதே கருவுற்றார்கள். இதனைக் கண்ட உமாதேவியார் அந்நவசக்திகள் மீது கோபம் கொண்டு "நீங்கள் இங்கு எமக்கு மாறுபட்டு நடந்தமையால் நீங்கள் பலகாலம் இக்கரு வெளிப்படாமல் இருக்கக் கடவீர்களாக" என்று சாபமிட்டார்.

## நவவீரர் தோற்றம்:

அச்சாபத்தைப் பெற்ற நவசக்திகளும் அஞ்சி, நடுங்கி உடல் வியர்த்தார்கள் அவ்வியர்வையினின்றும், இறைவனின் திருவருளால் ஓர் இலக்கம் வீரர்கள் தோன்றினார்கள். பின்னர் நெடுங்காலம் அந்நவசக்திகள் கருவுற்ற நிலையிலேயே இருந்து நந்தி கண்த் தலைவர்களையே அக்கருவினுள் ஏற்றுப்பாரம் தாங்காமல் வருந்த, சிவபெருமான் அது கண்டு உமாதேவியிடம் கூற உமாதேவியும் மனமிரங்கி அருள் செய்ய, அந்நவசக்திகள் ஒவ்வொருவரும் ஒரு காளை போன்ற வீரரைஉந்தியின் வழியாகப் பெற்றெடுத்தார்கள். அந் நவவீரர்களின் தலைவர்தாம் வீரவாகு தேவர்.

அந் நவவீரர்கட்கும் உமாதேவியார் தனித் தனியாகக் 'குந்தம்' ஒன்று கொடுத்து வாழ்த்தினர். சிபெருமான் அவர்கள் அனைவர்க்கும் தனித்தனியாக வாள் ஒன்றும் கொடுத்து. நவவீரர்களே! நீங்கள் ஓரிலக்கம் மைந்தர்களோடும் கூடி நாம் தோற்றுவித்துள்ள ஆறுமுகக் கடவுளுக்கு நீங்காதத் துணைவராகப் பணி செய்து வாழ்வீர்களாக" என்று பணிந்தருளினார்.

## கந்தவேளும் நவவீரர்களும்:

பின்னர் சிவபெருமான் உமாதேவியாரை அழைத்துக் கொண்டு சரவணப் பொய்கையை அடைய, அங்கே அறுமுகக்கடவுள் ஆறுதிருவுறுவங்களாய் தாமரை மலர்களில் இருக்க, அவ்வாறு திருமுகங்களையும் உமாதேவியார் தன்னிரு

கைகளாலும் அன்போடு எடுத்துத் தழுவ, அவ்வாறு திருவுறுவங்களும் ஒன்று சேர்ந்து, ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் சேர்ந்த ஒரு திருவுருவாக மாறியது. அவ்வாறுமுகக் கடவுளை உமாதேவியார் மார்போடணைத்து, உச்சி மோந்து, பாலூட்டி வளர்த்து மகிழ்ந்திருந்தனர்.

அம்முருகக் கடவுளை முன்கூறிய இலக்கத்தொன்பது வீரர்களும் அடைந்து அவர் பணித்த கட்டளைகளை ஏற்று பற்பலவீரச் செயல்களைப் புரிந்து வாழ்ந்ததிருந்தனர். முருகக் கடவுள் சூரபன்மன், சிங்கமுகன், தாரகாசூரன் ஆகியோர்களை, நவவீரர் துணை கொண்டு வதம் செய்து தேவர்கட்கெல்லாம் வாழ்வு தந்து, தெய்வானையையும், வள்ளியம்மையையும் திருமணம் கொண்டு கந்தவெற்பில் இனிதிருந்தார்.

## முசுகுந்த சக்ரவர்த்தி:

அக்காலை முசுமுகச் சோழன் என்பான் வசிட்ட முனிவர் அறிவுரைப்படி முருகக் கடவுளையடைய 'சஷ்டி' விரதத்தை முறைப்படி நோற்று காத்தச் சிறப்பால், முருகக் கடவுள் அவனது முருக பக்தியை மெச்சித் தம் நவவீரர்களோடும் மயில்மீது வந்து காட்சி தந்து "உனக்கு வேண்டியவற்றைக் கூறுவாய்" என்றருள முசுமுகச் சோழன் அறுமுகக் கடவுள் திருவடிகளிற் பணிந்து, "நான் என் முன்னோர்களைப்போல் சக்கரவர்த்திப் பதவிபெற்று பூமியிலே வாழ இவ்வீரவாகுத் தேவர் முதலிய துணைவர்களை அடியேனுக்கு உறவினர்களாகவும், படைத் துணைவர்களாகவும் தந்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டான்.

முருகக் கடவுள் அதுகேட்டு நவவீரர்களைப் பார்த்து "நீங்கள் யாவரும் இவ்வரசன்பாற் சென்று சிலகாலம் இவன் உறவினர்களாயும் படைத்துணைவர்களாயும் இருக்கக் கடவீர்கள்" என்று பணித்தருளினார். வீரவாகுத் தேவர் முதலியோர் முருகக் கடவுள் திருவடிகளைப் பணிந்து "எங்கள் முதல்வனே உங்கள் ஏவலின் கீழ் சூரபன்மன் முதலிய அசுரர்களை எல்லாம் ஒழித்து வெற்றி கொண்டிருக்கும் நாங்கள் இம்மானிட அரசரை அடைந்து அவரால் பணிக்கப்படும் தொழில்களைச் செய்ய மாட்டோம்" என்று கூறி மறுத்தனர்.

## செங்குந்தர் மரபு

இம் மறுப்புரையைக் கேட்ட முருகக் கடவுள் கோபமடைந்து "வீரர்காள்! நீங்கள் நமது கட்டளையை மறுத்ததனால், இதுவே காரணமாக நீங்கள் யாவரும் மானிட வடிவினராகி இவ்வேந்தன்பால் சேனைகளாக இருந்து காலத்தினைக் கழிக்கக் கடவீர்களாக" என்று கூற, அப்போதே அந் நவவீரர்களும் மானிட வடிவமடைந்தனர். அவர்களைப் பார்த்து செவ்வேள் குமரன், ' நமது' துணைவர்காள், மானிட வடிவினராய் செங்குந்த மன்னர் என்னும் பெயரோடு, இவ்வேந்தனின் சேனைத் தலைவராகி, உங்கள் பரம்பரையை மண்ணுலகில் பெருக வைத்து, பின்னர் நம்மை நோற்று தேவர் வடிவாகி நம்பால் வரக்கடவீர்களாக" என்று பணித்தருளி, முசுமுகச் சோழனைப் பார்த்து, "சோழனே! இவ்வீரர்கள் குந்தப் படையினை கையிற்கொண்டு உன் சேனைகளுக்குக் காப்பாளர்களாக இருப்பார்களாதலால், இதுமுதல் இவர்கட்கு

... இம்மண்ணுலகில்
... டற்கான முயற்சிகளை
... ம் முன்னாக அங்கிலன்மனைக்
... னாகிய அனகனை காஞ்சிபுரத்திற்
... ஒப்படைக்க வேண்டும் என்றும் கருதினார்கள்
... ல் காஞ்சிபுரத்தில் அன்கனுக்கும், கருவூரில்
... குட்டிச் சிறப்பித்தனர்; வீரவாகுத்தேவர் முதலிய நவ
... கிய அனகன், சனகன் உள்ளிட்ட ஆயிரத்துத் தொள்ளாயிரவருள்
... சனாக வீற்றிருக்க, மற்றவர் அவனுக்குத் துணைவர்களாக இருந்து
... ந்தப் பேரரசு ஒன்றை நிறுவினர். அவ்வரசுக்குத் தலைநகராக காஞ்சிபுரம்
... னும் மகாநாடும், திசைநாடுகளாக கிழக்கே சிவபுரம், தெற்கே தொந்திபுரம் மேற்கே
... ஞ்சிபுரம், வடக்கே சோளிங்கபுரம் என்னும் நான்கு நாடுகளும், ஒவ்வொரு
... டிற்கும் பதினேழு, பதினேழு கிளைநாடுகளாக மொத்தம் எழுபத்திரண்டு கிளை

நாடுகள் அமைந்து சிறந்து விளங்கின. அந்த எழுபத்திரண்டு நாடுகளிலும் சனகன் முதலிய செங்குந்தத் தலைவர்கள் சிற்றரசர்களாக இருந்து செங்குந்தப் பேரரசை நிலைபெறச் செய்தனர்.

## குந்தப்படை பற்றி

இனி உமாதேவியார்தான் நவவீரர்கட்குக் குந்தப்படையைத் தந்தனர் என்பதை ஒட்டக்கூத்தர் ஈட்டி எழுபதில்

*"ஆதிநாள் உமையவள் அளித்த குந்தமே"* (பாட்டு - 26)

*"வலம்பிரி யாத செவ்வேட் குறுதுணையாக மண்ணுட்*
*குலம்பெற வந்தா ரென்றங் கொடியுமை தந்த ஈட்டி"* (பாட்டு - 16)

மேலும் அக்கூத்தர் பிரானே அந்நூலில், குந்தப் படையின் சிறப்பை,

*"பூமாலை கடப்பம் தாமம் பூண்மணித் தெரியல் செய்ய*
*பாமாலை தன்னைத் கைகொள் முதலியர் பங்கதாக்கி*
*மாமாலை யொல்லார் காலில் வழிதுழிக் குடரின் மாலை*
*தேமாலை யாகச் சூடுங் செங்குந்தம் போலு முண்டோ?*

(பாட்டு - 43)

என்ற பாட்டாலும், முருகக் கடவுள் கையில் வேற்படையும், நவவீரர் பெற்ற குந்தப் படையும் வேறல்ல என்றும், சான்றோர்கள் எப்படி சிவன் வேறு, மால் வேறு என்று பிரித்து வணங்கமாட்டார்களோ, அத்தன்மைபோல் முருகவேள் தாங்கிய வேல் வேறு நவவீரர் தாங்கிய குந்தம் வேறு என்று சொல்லமாட்டார்கள் என்றும் விளம்புகின்றார்.

*"மால்வேறு சிவன்வே றென்ன வழுத்திட வண்மை போல*
*வேல்வேறு குந்தம் வேறென் றிருபொருள் விளம்பார் மேலோர்*

(பாட்டு - 42)

## கைக்கோளர்:

நம் செங்குந்தர்க்குக் கைக்கோளர் என்னும் பெயரும் வழங்கி வருகின்றது இரண்டாயிரத்து நானூறு ஆண்டுகட்கு முன்னர் சேந்தன் திவாகரரால் இயற்றப்பட்டுள்ள நிகண்டு நூலில்,

*"செங்குந்தப் படையர் சேனைத் தலைவர்*
*தந்து வாயர் காருகர் கைக்கோளர்"*

என்று செங்குந்தர், சேனைத்தலைவர், தந்துவாயர், காருகர், கைக்கோளர் ஆகிய ஐந்து பெயர்களும் ஒரு வகுப்பாரையே குறிக்கின்றன என குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த ஐந்து பெயர்களுள் "காருகர்" என்னும் பெயரை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சிலப்பதிகாரத்தில் இந்திரவிழவூர் எடுத்த காதையில்

*"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்*
*கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்"* (பாட்டு 5: 16, 17)

என்று எடுத்தாளப்பட்டிருக்கக் காண்கிறோம். அன்றியும் இக்காலத்தே நம்மில் பல்லோர் நெசவுத் தொழிலையே கொண்டு வாழ்வது போல, அக்காலத்திலேயும் நம்மவர் "காருகர்" என்னும் பெயரோடு காவிரிப்பூம்பட்டினத்தில் நெசவுத் தொழிலை மேற்கொண்டொழுகினார் என்பதையும், அவர்கட்குத் தனி குடியிருப்புகள் இருந்தன என்பதையும் இச்சிலப்பதிகாரவடிகள் உணர்த்தக் காணலாம்.

கைகோளர் என்னும் சொல்லுக்கு சிறந்த கொள்கைகளைக் கைக் கொண்டவர் என்றும், கையுழைப்பைக் கொண்டு வாழ்வு நாடத்தியவர் என்றும் கூறலாம். வீரவாகு தேவர் என்பதின் வேறுபெயர் தான் கைக்கோளர் என்றும் சிலர் கூறுகின்றனர். இதற்குக் காரணம் குந்தத்தைக் கைக்கொண்டமையால் இருக்கலாம்.

முதலியார்:

நம்மை முதலியார் என்னும் பட்டப் பெயராலும் வழங்குபவர் இதற்குரிய காரணத்தை ஈட்டி எழுபது நமக்கு விளக்கிக் கூறுகிறது. சூலத்தையும் மழுவாயுதத்தையும் தமது கைகளிலுடைய பரமசிவன்: இந்திரன் - நான்முகன் - திருமால் முதலிய தேவர்கள் யாவருக்கும் முதன்மையாக ஆதியில் எழுந்தருளி வந்த தன்மையால் அபபரமசிவனுக்கு முதலியார் என்றொரு பெயர் வந்தது. ஆதலால் அவா மரபில் வந்த செங்குந்தர் சந்ததியார்க்கும் முதலியார் என்ற பெயர் வந்தது.

*"இந்திரன் அயன்மாறேவர் யாவாக்கு முதன்மையாக*
*வந்தபான் மையினாற் சூல மழுப் படையத்த னார்க்கு*
*முந்திய நாமந் தானு முதலியார் ஆகை யாற்செங்*
*குந்தர்சந் ததிக்கும் அப்பேர் முதலியார் என்று கூறும்"*

(பாட்டு - 29)

"செங்குந்தர் பிரபந்தத்திரட்டு" எனும் நூலையும் திரு. வித்துவன் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்களால் எழுதப்பெற்று, திரப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியிட்டுள்ள "கந்தபுரான வசனம்" எனும் நூலையும் அடிப்படையாகக் கெண்டு எழுதப் பெற்றது.

குறிப்பு: (இவ்வரலாறு 1926-ல்ஸ்ரீலஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களால் பதிப்பிக்கப் பெற்று, செங்குந்த மகாஜன சங்க நிறுவனர் திரு தி. நா. சபாபதி முதலியார் அவர்களால் வெளியிடப் பெற்ற "செங்குந்தர் பிரபந்தத்திரட்டு" எனும் நூலையும் திரு வித்துவன் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்களால் எழுதப்பெற்று, திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியிட்டுள்ள "கந்தபுராண வசனம்" எனும் நூலையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப் பெற்றது.)

# இணைப்பு - 5

## கவிச்சக்ரவர்த்தி கம்பர் இயற்றிய மங்கள வாழ்த்து வாழி

### காப்பு

நல்ல கணபதியை நாம் காலமே தொழுதால்
அல்லல்வினையெல்லாம் அகலுமே சொல்லரிய
தும்பிக்கையோனைத் தொழுதால் வினைதீரும்
நம்பிக்கை யுண்டே நமக்கு

### அகவல்

அலைகடல் அமிர்தம் ஆரணம் பெரியவர்
திங்கள் மும்மாரி செல்வஞ் சிறந்திட
கந்தன் இந்திரன் கரிமா முகத்தோன்
சந்திரர் சூரியர் தானவர் வானவர்
முந்திய தேவர் மூவருங் காத்திட
நற்கலியாணம் நடந்திடும் சீர்தனில்
தப்பித மில்லாமல் சரஸ்வதி காப்பாய்
சீரிய தினைமா தேனுடன் கனிமா
பாரிய கதலிப் பழமுடன் இளநீர்
சக்கரை வெல்லம் தனிப்பலாச்சுளையும்
மிக்கதோர் கரும்பு விதவிதக்கிழங்கு
எள் அவல் நற்பொரி இனித்தபாகுடனே
பொங்கல் சாதம் பொரி கறி முதலாய்
செங்கை யினாலே திரட்டிப் பிசைந்து
ஆரமுது அருந்தும் அழகு சிறந்த
பேழை வயிற்றுப் பிள்ளைக் கணபதியே:
அடியேன் சோதனை அவனியில் குறித்துக்
கடுகியே வந்தென் கருத்தினில் நின்று
நினைத்த தெல்லாம் நீயே முடித்து
மனத்துயர் தீர்ப்பாய் மதகரி சரணம்
மங்கல வாழ்த்தை மகிழ்ச்சியாய் ஓத
என்குரு நாதன் இணையடி போற்றி
கிரேதா திரேதா துவாபரம் கலியுகம்
செம்பொன் மகுடம் சேரன் சோழன்
பாரமா முடியும் பாண்டியன் என்னும்
மூன்று ராஜாக்களும் ராஜ்யம் ஆளுகையில்
கருவுரு வாகித் திருவதி அவள்புகழ்

சிறந்த மானிடம் தாயது சுத்தம்
வாழ்வது பொருந்தி செம்மையுடனே சிறந்திடுங்காலம்
இந்திரன் தன்னால் இங்கு வந்த நாளில்
பக்குவமாகிப் பருவங்கண்டு
திக்கில் உள்ளபேர்கள் சிலபேருங்கூடி
வேதியன் பக்கம் விரைவுடன் சென்று
சோசியரை யழைத்துச் சாஸ்திரங் கேட்டு
இந்த மாப்பிள்ளை பேர்தனைக் கூறி
இந்தப் பெண்ணின் பேர்தனைச் சொல்லி
இருவர் பேரரையும் ராசில் கேட்டுக்
கையில் ஓடிய கைரேகைப் பொருத்தம்
ஒன்பது பொருத்தம் உண்டாவென்று பார்த்துத்
தாலிப் பொருத்தம் தவறாமல் கேட்டு
வாசல் கௌரி வலிதென் நிமித்தம்
தெளிவுடன் கேட்டுச் சிறியோர் பொரியோர்
குறிப்புச் சொல்லக் குறிப்புக் கேட்டு
உத்தம பாக்கியம் தச்சனைக் கேட்டு
பொருந்தி யிருத்தலால் பூரித்து மகிழ்ந்து
சிலபேருடனே சீக்கிரம் புறப்பட்டு
மச்சினன் ஊருக்கு வண்டியில் சென்று
வெண்கல முரசு வீதியில் கொட்டத்
தங்க நகரி தானாயலங்க கரித்து
முத்துக்கள் தன்னை முசம்பரக் கொட்டி
சித்திரக்கூடம் சிறக்கவே விளக்கி
உரியவர் வந்திருந்து உன்மகளுக்கென்று சொல்லி
பிரிய முடன்வெற்றிலை மடிதனில் கட்டி
நாளது குறித்து நல்விருந்துண்டு
பூட்டு தாலிக்குப் பொன்னது கொடுத்து
வாழ்வது மனைக்கு மனமகிழ வந்ததுமே
கற்றோர் புலவர் கணக்கரை யழைத்து
தேன் பனையோலை சிறக்கவே வாரி
திசை திசையெங்கும் தென்னவரை அனுப்பி
கலியாண நாளைக் கணித்து அறிவித்தார்
வாழை கமுகு மகமே ருடனே
சோலை இலையால் தோரணங் கட்டி
மூத்தோர் வந்து மொழுகி வழித்துப்
பார்க்குமிடமெங்கும் பாலகளைத் தெளித்து
பெண்டுகள் வழங்கும் பெரிய கலத்தைக்
கொண்டுவந் ததனைக் குணமுடன் விளக்கி

நேரிய சம்பா அரிசையை நிறைத்துப்
பாரிய வெல்லம் பாக்கு வெற்றிலை
சீருடன் நெய்யும் தேங்காய் பழமும்
வாரியே வைத்து வரிசை குறையாமல்
முறைமைய தாகவே முக்காலி மேல்வை
மணம் பொருந்திய மாப்பிள்ளை தனக்
குணம் பொருந்திய குடிமகனை யழைத்
போன மச்சம் முகமது துடைத்து
எழிலான கூந்தலுக்கு எண்ணை தனை
குணமது சீவக்காய் கூந்தலில் தேய்த்துபே
ஏழு தீர்த்தம் இன்முடன் விட்டு
மேழை முடனே விளாவியே வார்த்து
செந்நெற் சோற்றால் சீக்டை கழித்து
வர்ணப் பட்டாடை வஸ்திரந் தன்னை
நெறுங்கக் கொய்து நேர்த்தியாய் உடுத்தி
அன்ன முப்பழமும் ஆவின் பாலும்
மன்னவர் முன்னே வந்தவ ருடனே
வாசல் கிளறி மதிப்புடன் கூட்டி
சாணாங்கு கொண்டு தரைதனை மெழுகி
கணபதி ஒன்றைக் கருத்துடன் நாட்டி
அருகது சூடி அருள் பொருந்திடவே
நிறமிய தாகவே நிறை நாளி வைத்து
வெற்றிலை பழமும் விருப்பமுடன் வைத்து
அலைகடல் அமிர்தம் அவணியின் நீரும்
குழவிக்குக் கங்கணம் குண முடன் தரித்து
களரியோர் மெச்சிடக் காப்பது கட்டி
குப்பாரி கொட்டிக் குலதேவதையை தானழைத்து
செப்பமுடன் மன்னவர்க்கு திருநீற்றுக்காப்பணிந்
சாந்து சந்தனம் தான் பன்னீரும்
சேர்த்துக் கலக்கிச் சிறக்கவே பூசி
கொத்தரளி கொடியரளி கோத்திரத்து நல்லரளி
முல்லை யிருவாட்சி முனைமுறியாச் செண்பகப்பூ
நாருங் கொழுந்தும் நந்தியா வட்டமும்
வேருங் கொழுந்தும் விலவ பத்திரமும்
மருவு மரிக்கொளுந்தும் வாடாத புஷ்பங்களும்
புன்னை கொன்னை பூக்கள் எல்லாம் கொண்டு வந்து
தண்டைமாலை கொண்டமாலை சோபனமாலை சுடர் ப
ஆடையாபரணம் அலங்கிரத மிகச் செய்து
திட்டமுடன் பேழைதனில் சோறுநிறை நாளிவைத்து

நட்டு முட்டுத்தான் முழங்க நாட்டார் சபைதனுக்கு
நன்றாய் வலம் வந்து நலமதாய் நிற்கையிலே
செஞ்சோறு ஐந்துஅடை சிரமதைச் சுற்றியுமே
திஷ்டி கழித்துச் சிவசூரியனைக் கைதொழுது
அட்டியெங்கும் செய்யாமல் அழகு மனைக்குவந்து
மணவரை யலங்கரித்து மன்னவரைத் தானமர்த்தி
இணையான தங்கையரை ஏந்திழையத் தானழைத்து
சந்தனம் புனுகு சவ்வாது மிகப்பூசி
மந்தாரை மல்லிகை மருக்கொழுந்து மாலையிட்டு
ஆடையாபரணம் அழகு பெறத்தான்பூண்டு
கூறை மடித்துவைத்துக் குணமுள்ள தங்கையரும்
பேழைமூடி தான்சுமந்து பிறந்தவரைச் சுற்றிவந்து
பேழையை இறக்கிவைத்து பிறந்தவளை அதில்நிறுத்தி
கூறைசேலை ஒருதலைப்பை கொப்பனையாள் கைப்பிடித்து
மாப்பிள்ளை கக்கத்தில் மறுமுனையைத் தான் கொடுத்து
அருமைப் பெரியயோர்கள் அழகு மாப்பிள்ளைகையை
அரிசியில் பதித்துவைத்து அய்ங்கரனுக்குப் பூசைசெய்து
மங்கல வாழ்த்துக்கூற மணவறையில் குடிமகனுக்கு
செங்கையால் அரிசிஅள்ளி சிறக்ககொடுத்திடுவார்
குடிமகன் மங்கலவாழி கூறி முடிந்தவுடன்
வேழமுகத்து விநாயகரின் தாள்பணிந்து
சந்திரரும் சூரியரும் சபையோர்கள் தானறிய
இந்திரனார் தங்கை இணையோங்க வந்தபின்பு
அடைக்காயும் வெற்றிலையும் அடிமடியிற் கட்டியபின்
முன்னை ஒருதரம் விநாயகருக்கு இணையோங்கி
பின்னே ஒருதரம் பிறந்தவர்க்கு இணையோங்கி
இந்திரனார் தங்கைக்கு இணையோங்கி நின்றபின்பு
தேங்காய் முகூர்த்தமிட்டுச் செல்வ விநாயகனைப்
பாங்காகக் கைதொழுது பாரிகொள்ளப் போரோமென்று
மாதா வுடனே மகனாரும் வந்திறங்கி
போதவே பால்வார்த்துப் போசனமுந் தான்அருந்தி
தாயாருட பாதம் தலைகுனிந்து தெண்டனிடப்
போய்வா மகனே என்றாள் பூங்கொடிக்கு மாலையிடப்
பயணமென்று முரசுகொட்டப் பாரிலுள்ள மன்னவர்கள்
மதகரி அலங்கரித்து மன்னவர்கள் ஏறிவர
தந்தை யானவர் தண்டிகை மேல்வர
தமையன் ஆனவர் ஆனையின் மேல்வர
நாடியே வந்தவர்கள் நக்ஷத்திரம் போலவர
தேடியே வந்தவர்கள் தேரரசர் போலவர
பேரணி முழங்க பெரியநகாரடிக்க

பூரிதான் அதிர புல்லாங்குழல் ஊத
எக்காளஞ் சின்னம் இடிமுரசு பெரியமேளம்
கைத்தாள் பம்பை கனகதப்பட்டை தான்முழங்க
துத்தாரி நாககரம் சோடிகொம்பு தானூத
சேகண்டி சங்கு திமிர்தாள பம்மையுமே
வலம் புரிச்சங்கு வகையாய் ஊதிவர
உருமேளம் பரமேளம் உரம்பை திடும்படிக்க
பலபல விதமான பக்கவாத்திய முழுங்க
பல்லாக்கு முன்னடக்க பரிசுகள் பறந்துவர
வெள்ளைக்குடை வெண்சாமரம் வீதியில் வீசிவர
சுருட்டிய சூரியவாணம் தீவட்டி முன்னடக்க
இடக்கை வலக்கை இனத்தார்கள் சூழ்ந்துவர
குதிரையின் மீதமர்ந்து குணமுள்ள மாப்பிள்ளைதான்
சேனைகள் முன்னே சிறந்து முன்னடக்க
கட்டியங்கள் கூறிக் கவிவாணர் பாடிவர
நாட்டியங்களாடி வந்தாள் நல்லநல்ல தெய்வடியாள்
பாகமாஞ் சீலைப் பந்தம் பிடித்திட
மேகவர்ணச் சேலை மின்னல்போல் மின்ன
அடியாள் ஆயிரம்பேர் ஆலாத்தி யேந்திவர
பெண் வீட்டார்கள் பிரியமுடன் எதிர்வந்து
மன்னவர் தங்களை வாருங்கள் என்றழைத்து
வெகு சனத்துடனே விடுதியில் விட்டுவந்தார்
வாழ்வரசி மங்கைக்கு வரிசை அனுப்புவோமென்று
நாழியரிசிக் கூடை நன்றாக முன்னனுப்பி
பொன் பூட்டப்போகிறவர் பேடை மயிலியற்கு
நல்ல முகூர்த்தம் நலமுடன் தான் பார்த்து
பெட்டிகளும் பேழைகளும் பொன்னும் சீப்புகளும்
பட்டுப்பணி நகையும் பார்க்கக் கண்ணாடியும்
சத்துச் சரப்பணி தங்கம்பொன் வெள்ளிநகை
முத்துச் சரப்பணி மோகன மாலைகளும்
திட்டமுள்ள மங்கையர்க்கு திருப்பூட்டப் போறோமென்று
அஷ்டதிக்கும் தானதிர அடியுமென்றார் பேரிகையை
அன்ன நடையாரும் அருமைப் பெரியவரும்
பொன்னுவளையல் கையால் பேழைமுடி தான்சுமந்து
இன்னும் சிலபெண்கள் இவர்களைச் சூழ்ந்துவர
சென்றுஉட்புகுந்தார் திருப்பெண்ணாள் மாளிகையில்
நாட்டில் உள்ள சீர்சிறப்பு நாங்கள் கொண்டு வந்தோமென்று
கொண்டுவந்த அணிகலனைக் கோதையர்க்கு முன்புவைக்க
கண்டு மகிழ்ந்தார்கள் கன்னியர்கள் எல்லோரும்
பூட்டினார் தோடெடுத்து பொன்னாள் திருக்காதில்

தங்கச் சங்கிலிதனை தான்கழுத்திலிட்டார்கள்
அடைக்காயும் வெற்றிலையும் அன்பாக மடியில்கட்டி
ஆணிப் பெண்ணவளை அலங்கரித்துக் குலம்கோதி
சாந்துப் பொட்டிட்டு சவ்வாது மிகப்பூசி
ஊட்டுமென்றார் சாதம் உடுத்துமென்றார் பட்டாடை
பொன்பூட்ட வந்தவர்க்குப் பூதக்கலம் தான்படைத்து
அன்பாக வெற்றிலை அடைக்காயுந் தான்கொடுத்தார்
தாய்மாமன் தன்னை தன்மையுட னேயழைத்து
சந்தனம் மிகப்பூசி சரிகைவேஷ்டி தான்கொடுக்கப்
பொட்டிட்டுப் பொன்முடிந்து பேடைமயிலியர்க்குப்
பட்டமும் கட்டினார் பாரிலுள்ளோர் தானறிய
ஆரணங்கு பெண்ணை அலங்கிரத மிகச்செய்து
மாமன் குடைபிடித்து மாநாட்டார் சபைக்குவந்து
வலமதாய் வந்து நலமதாய் நின்று
செஞ்சோர் ஐந்துஅடை சிரம்கால் தோளில்வைத்து
நிறைநாளி சுற்றியே நீக்கி திஷ்டிகழித்து
அட்டியங்கள் செய்யாமல் அழகு மனைக்குவந்து
மங்கள கலியாணம்செய்ய மணவரை யலங்கரித்து
அத்தி யொருதுத்திப்பட்டு அநந்த நாராயணப்பட்டு
பஞ்சவர்ண நிறச்சேலை பவளவர்ணக் கண்டாங்கி
மாந்துளிச்சேர் பூங்கொத்து வர்ணமுள்ள பட்டாடை
மேலான வெள்ளைப்பட்டு மேற்கட்டுங்கட்டி
கட்டியே யிருக்கும் கனம்பெரிய வாசலிலே
அருமையுள்ள வாசலிலே அனைவோரும் வந்திறங்கிப்
பொறுமையுள்ள வாசல்தனைப் பூவால் அலங்கரித்து
சேரர்சோழர் ராஜாக்கள் சேர்ந்திருக்கும் வாசலிலே
செம்பொன் மிகுந்தோர்கள் சிறந்திருக்கும் வாசலிலே
வீரலக்ஷ்மி யவள் விளங்கிடும் வாசலிலே
விருதுகள் வழங்கிடும் விசேஷ வாசலிலே
தரணியில் அண்ணக்கொடி கட்டியிருக்கும் வாசலிலே
பன்னீராயிரம் பேர் பலபேர் வாசலிலே
நாற்கரசு நாட்டி நல்ல முகூர்த்தமிட்டுப்
பேய்க்கரும்பை நாட்டிப் பிறைமண்ணுந் தான் போட்டு
சாலலுங் கரகமும் சந்திரரும், சூரியரும்
அம்மி வலமாக அரசாணி முன்னாக
ஆயிரப் பெருந்திரி அதுவும் வலமாக
சுத்தமுடன் கலம்விளக்கிச் சோறரிசி பால்பழமும்
பக்தியுடன் நித்தனையும் பாரித்தார் மணவரையில்
மணவறை அலங்கரித்து மணவாளனை யிருத்தி

அழகுள்ள பெண்ணை அலங்கிருத மிகச்செய்து
மாமனெடுத்து மணவரையைச் சுற்றிவந்து
மகிழ்ச்சியது மீதூற வலதுபுறம் தானிருத்தி
குலம்பெரிய மன்னவர்கள் குவலயத்தார் சூர்ந்திருக்க
ராமனி வரோ இலக்ஷ்ம னிவரோ
கண்ணன் இந்திரன் காமன் இவரோ
அத்தை மகள்தனை அழகு செல்வியை
முத்து ரத்தினத்தை முக்காலிமேல் அமர்த்தி
கணபதி தெய்வமுன் கட்டும் மங்கலியம் வைத்து
அருமைப் பெரியவர் அன்புடன் பூஜைசெய்து
மாப்பிள்ளை பெண்ணை மணவரையில் எதிர்னிருத்தி
கெட்டிமேளம் சங்குநாதம் கிடுகிடென்று சப்திக்க
மாணிக்கம்போல் மாங்கல்யம் வைடூரியம்போல் திருப்பூட்டி
ஆரம்தனை யாற்றி அமர்ந்தபின் மணவறையில்
மாப்பிள்ளைக்கு மைத்துனரை வாவென்று தானழைத்து
கலம்பெரிய அரிசிதன்னில் கைகோர்வை தானுமிட்டு
சிங்காரமான அந்த தெய்வ சபைதனிலே
கம்பர் சொன்ன வாழ்த்துரையை
மங்கலமும் கன்னிசொல்ல வாத்திய மெல்லாமடக்கி
மறையோர்கள் வேதம்சொல்ல மற்றவர்கள் ஆசிகூற
பிறைஆயிரம் தொழுது பிள்ளையாருக்குப் பூசைசெய்து
அருமைபெற்ற பெரியோர்கள் அருகுமணம் செய்தபின்பு
கைக்குக் கட்டின கங்கணமும் தானவிழ்த்து
தங்களுக்குத் தங்கள் தாரைக்கோர் பொன்கொடுத்து
உரியதோர் பட்டாள் இருவருட கைதனிலே
தண்ணீர் ஊற்றியே தாரையும் வார்த்தபின்பு
பிரிமுள்ள மணவரையை பின்னும் சுற்றிவந்து
மங்கல கலியாணம் வகையாய் முடிந்ததென்று
செங்கை யினாலே சிகப்பிட்டிருவருக்கும்
சாப்பாடு போசனம் சந்தோஷமாய்ப் போட
உண்டுபசி யாறி உறன்முறையோர் எல்லோரும்
கொண்டுவந்த பொன்முடிப்பைக் கொடுத்துச் செலுத்துமென்றார்
மண்டலத்தோர் எல்லோரும் மணப்பந்தலில் அமர்ந்து
கலியாணத்தார் தன்னைக் கருத்துடனேயழைத்து
கண்ணாளர் தமையழைத்துப் பொன்னோட்டம் காணுமென்றார்
அப்போது கண்ணாளர்அவ்விடமே தானிருந்து
பணமது பாத்துக் குணமது கழித்து
கல்லுவாகன் கருவூப்பணமும்
வெள்ளைப் புள்ளடி வேற்றூர் நாணயம்
சம்மன் கட்டி சாத்தூர் தேவன்

உரிக்காசுப் பணம் உயர்ந்த தேவராயர்
ஆண்மாடை பெண்மாடை அரியதோர் பொற்காசு
ஒருமுழி முழிக்க ஒருமுழி பிதுங்க
பலவகை நாணயமும் பாங்காகத் தெரிந்து
முன்னூற பொன்னு முடிப்பொன்றாய் முடிந்தவுடன்
பாட்டன் இருந்து பரியம் செலுத்தினார்
பந்தல் கௌரி பாக்கியம் உறைக்க
மச்சினன் மார்கள் மகிழ்ந்து சூழ்ந்துநிற்க
சிற்றடிப் பெண்கள் சிறுசீர்கள் சுமந்துவர
சந்தோஷ மாகித் தங்கமுடி மன்னவர்கள்
கபந்தச் செலவு பலபேர்க்கும் ஈந்தார்கள்
ஆடுவான் பாடுவான் ஆலாத்தியுட் பட
நாடிவந்த பேர்களுக்கு நல்ல மனதுடனே
சகாயமென்ற பேர்களுக்கு தனிப்பணம் தான்கொடுத்து
வாழீப் புலவருக்கு வரிசைதனைக் கொடுத்து
திட்டமுள்ள பந்தலின் கீழ் வந்துநின்ற பேர்களுக்கு
அரிசி அளந்தார்கள் அனைவோரும் தானறிய
கரகம் இறக்கிவைத்துக் கன்னி மணவாளனுக்கு
புடவைதனைக் கொடுத்துப் பின்னுந் தலைமுழுகி
சட்டுவாச்சாதம் பெண் தளிர்கரத்தால் மாப்பிள்ளைக்கு
சாதம்பரி மாறி சாப்பிட்டு ஆனவுடன்
பண்ணையத்து மாதிகனைப் பண்பாகத் தானழைத்து
வில்லை மிதியடிகள் மிக்கவே தொட்டபின்பு
காலும் வழங்கிக் கன்னிகையைத் தானழைத்து
மஞ்சள் நீராடி மறுக்க இரு அழைப்பழைத்து
மாமன் மார்களுக்கு மகத்தான் விருந்துவைத்து
மங்கள சோபனம் வகையாய் முடிந்தவுடன்
மாமன் கொடுக்கும் வரிசைதனைக் கேளீர்
துப்பட்டு சால்வை சோமன் உருமாலை
பஞ்சவர்ணக் கண்டாங்கி பவளநிறப்பட்டு சேலை
அத்தியடி துத்திப்பட்டு ஆனையடிக் கண்டாங்கி
மேலான வெள்ளைப்பட்டு மேகவர்ணக் கண்டாங்கி
இந்திர வர்ணப்பட்டு ஏகாந்த நீலவர்ணம்
முறுக்கு வளையல்களும் முகமுள்ள கொலுசுகளும்
பதக்கம் சரப்பணி பகட்டான் காசுமாலை
கட்டிலும் மெத்தையும் காளாங்கி தலையணையும்
வட்டில் செம்பும் வழங்கும் சாமான்களும்
காளை வண்டியும் கன்றுடன் பால்பசுவும்
குதிரையுடன் பல்லாக்கு குறையாத பல்பண்டம்
நிறையக் கொடுத்தார்கள் நேயத்தோர் தானறிய

# வாழிப்பாட்டு

ஆதிகணேசன் அன்புடன் வாழி
வெற்றி வேல்கொண்ட வேலவர் வாழி
வாணி சரஸ்வதி மகிழ்வுடன் வாழி
எம்பெருமானின் இணையடி வாழி
பாரத தேசம் பண்புடன் வாழி
மாது உமையவள் மகிழ்வுடன் வாழி
முப்பத்து முக்கோடி தேவரும் வாழி
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் வாழி
மாப்பிள்ளை பெண்ணும் மகிழ்வுடன் வாழி
வேதம் ஓதிடும் வேதியர் வாழி
கொங்கு நாட்டுக் குடிகளும் வாழி
வாழியே யானும் மகிழ்வுடன் வாழி
என்குரு கம்பர் இணையடி வாழி
வையத்து மக்கள் மற்றவரும் வாழி
இந்தப்பாட்டுக் கேட்டவர் எல்ரோரும் வாழியே
ஆல்போல் தழைதழைத்து அருகுபோல் வேறூன்றி
மூங்கில்போல் கிளைகிளைத்து முசியாமல் வாழ்ந்திருக்க

மங்கல வாழ்த்து வாழி முற்றிற்று.

## முடிவுரை:

இவ்வரலாறு. நாம் செங்குந்தர் என்னும் பெயற் பெற்ற வரலாற்றையும். நம்மை கைக்கோளர் என்றும் முதலியார் என்றும் வழங்குவதற்குரிய காரணத்தையும். நா கயிலாயப் பரம்பரையினர் என்பதையும். வீரவாகுத் தேவர் வழி வந்தவர்க என்பதையும். நாம் செங்குந்தப் பேரரசு அமைத்து நல்லாட்சி புரிந்தவர்க என்பதையும் தெற்றெனத் தெளிவாக்கும் அன்றோ?





👈நம் சமூகத்தில் உள்ள வரலாறு அறிய இந்த **QR code** ஐ **scan** செய்யவும்

**https://senguntharmudaliarhistory.blogspot.com/?m=1**

நம் சமூகத்தில் வரலாறு அறிய இந்த **QR code** ஐ **scan** செய்யது **@sengunthar_kaikola_mudaliyar Instagram page** ஐ **follow** பண்ணுங்க👉





👈நம் சமூகம் சார்ந்த செய்திகளை அறிய இந்த **QR code** ஐ **scan** செய்யது **@mudaliyar_vamsam Instagram page** ஐ **follow** பண்ணுங்க

நம் சமூகத்தில் சார்ந்த செய்திகளை அறிய இந்த **QR code** ஐ **scan** செய்யது **@veerasenguntharmarabu Facebook page** ஐ **follow** பண்ணுங்க👉





நூல்களைக் கற்க வேண்டும். கற்பதோடன்றி நம்போல் உலகம் உய்யும்படி கற்பிக்க வேண்டும் என்பது சான்றோர் வாக்கு.

நம் திருமண முறைகளை பலரும் படித்து அறிந்து கொள்வதற்காகவும் அறிந்ததை மற்றவர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயனடையும் ஆர்வத்தில் இப்பதிப்பினை அன்பளிப்பாக அளிப்பதில் மகிழ்வடைகிறோம்.

sri vaari impress. Tel : 0422 2344605